லாங்மன்ஸ்





# தமிழ்ப் பாடம்

## மூன்றாம் புத்தகம்

ம. வீ. இராமானுஜாசாரியர்

லாங்மன்ஸ்

# தமிழ்ப் பாடம்

## மூன்றாம் புத்தகம்

கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் ரிடயர்ட் தலைமைத் தமிழ்ப்
பண்டிதரும் தமிழ் மஹாபாரதப் பதிப்பாசிரியருமாகிய
பாஷாபாரத துரந்தர, மகாமகோபாத்தியாய,

**ம. வீ. இராமானுஜாசார்யர்**

இயற்றியது




லாங்மன்ஸ், க்ரீன் அண்ட் கம்பனி, லிமிடெட்
36A, மௌண்ட் ரோட், மதராஸ்
கல்கத்தா, பம்பாய்
1939

ஸ்ரீ:

# முகவுரை

"லாங்மன்ஸ் தமிழ்ப் பாடம்" என்ற வரிசையில் இது மூன்றாவது புத்தகமாகும். முன் இரண்டு புத்தகங்களையும் கற்றவர்களுக்கு, இப்புத்தகம், வேறு பல செய்திகளையும் சற்று விரிவான முறையில் அறிவிப்பதாகவே அமைந்துள்ளது.

இப்புத்தகத்திலுள்ள வசன பாடங்கள், இரண்டாவது புத்தகத்திலுள்ள பாடங்களைக் காட்டிலும் விஷயத்தால் உயர்ந்தவையாகவும் அளவால் பெரியவையாகவுமே அமைந்துள்ளன. இதனுள் சிறுவர் சிறுமியர்களுக்கு உற்சாகத்தை அளிக்கும் புனைகதைகளும், இதிகாசம் புராணம் முதலியவற்றிலுள்ள கதைகளும் இருப்பது பெரும்பயன் தருவதாகும். மேலும், நவீன முறையைத் தழுவிய பிற பாடங்களும், சம்பாஷணைப் பாடங்களும், பயிற்சிப் பகுதிகளும் வகுப்புக்கேற்பச் சேர்க்கப்பட்டுள்ளன. பெரும்பாலான பாடங்களில் கருத்தை விளக்கும் படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இங்ஙனமே, எளிதில் மனப்பாடம் பண்ணக்கூடிய இலகுவான தொடர்மொழிகளாலாகிய சிறந்த செய்யுட்பகுதியும் வேண்டிய அளவு சேர்க்கப்பட்டுள்ளது. பயிற்சிக் கேள்வி சிலவே சேர்க்கப்பட்டுள்ளனவாயினும், உபாத்தியாயர், பிள்ளைகளின் சக்திக்கேற்றவாறு கேள்விகள் அமைத்துக் கொள்ளலாம். சித்திரம் கைவேலை முதலிய பயிற்சிகளும் அந்த அந்தப் பாடங்களுக்கேற்பப் பிள்ளை

களுக்குக் கொடுத்துப் பாடங்களைக் கற்பதில் பிள்ளைகளுக்கு உற்சாகத்தை உண்டாக்கலாம்.

இப்புத்தகத்தைத் தங்கள் பள்ளிக்கூடங்களில் பாடமாக வைத்துக் கற்பிக்கும் ஆசிரியர்கள் இதில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களைத் தயைசெய்து தெரிவிப்பார்களானால், அவற்றை, வந்தனம் செய்து ஏற்று, அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுமாறு உரியவர்களை வேண்டிக் கொள்வேன்.

இங்ஙனம்,

**ம. வீ. ரா.**

# பாட அட்டவணை

ஸ்ரீ:

# லாங்மன்ஸ் தமிழ்ப் பாடம்

(மூன்றும் புத்தகம்)



## 1. கிளி

பச்சைக்கிளி மிக அழகானது. அதன் உடல் முழுதும் பச்சையாயும் அலகு மாத்திரம் சிவப்பாயும் இருக்கும். அலகு நுனியில் வளைந்திருக்கும். அது உறுதியாயும் கூர்மையாயும் இருக்கும். ஆதலால், கிளி கடினமான கொட்டைகளையும் அலகினுல் எளிதில் உடைத்துத் தின்னும்.

கிளியின் கண்கள் சிறியவையாயும் வட்டமாயும் இருக்கும். கண்களை மூடிக்கொள்ள வெண்மையான தோல் இருக்கிறது. கிளியின் உடல் மிக்க மென்மையானது.

கிளியின் கால்கள் சிவப்பானவை. ஒவ்வொரு காலிலும் முன்னே இரண்டும் பின்னே இரண்டு மாக நான்கு விரல்கள் உண்டு. விரலிலுள்ள நகங்கள் கூர்மையாயும் வளைவாயும் இருக்கும். ஆதலால், கிளி எந்தப் பொருளையும் தன் கால்விரல்களால் உறுதியாகப் பிடித்துக்கொள்ளும். இந்தக் கால்களே கிளிக்குக் கைகள்போலவும் உதவுகின்றன. விரல்களிலுள்ள நகங்கள் தொத்தி ஏற அனுகூலமானவை.

கிளிகள் மரப்பொந்துகளில் வசிக்கும். பெரிய கோபுரங்களிலும் மதில்களிலுமுள்ள மாடங்களிலும் அவை வசிப்பதுண்டு. கிளிகள் காட்டில் கூட்டம் கூட்டமாக இருக்கும். ஆனாலும், சிலர் கிளியை வீடுகளில் கூட்டில் வைத்து வளர்க்கிறார்கள்.

கிளி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்; குஞ்சுக்கு உணவு தேடிக் கொடுக்கும். குஞ்சு, பெரிதானவுடன் தானே இரைதேடிக்கொள்ளும். அப்பொழுது, அது தாயை விட்டுப் பிரிந்துபோம். கிளிக்குஞ்சைக் கிளிப்பிள்ளை என்று சொல்வது வழக்கம்.

கிளிகள் பழங்களையும், காய்களையும், சில கொட்டைகளிலுள்ள பருப்பையும் தின்னும். அவை நெல், எள் முதலிய பயிர்களில் கூட்டம் கூட்டமாக வந்து மேயும்.

கிளிகளில் பல நிறமானவை உண்டு. எல்லாவற்றிலும் அதிக அழகானது பஞ்சவர்ணக் கிளி. அது வெண்மை, பச்சை, மஞ்சள், சிவப்பு, நீலம் ஆகிய ஐந்து நிறமுடையதாயிருக்கும்.

பூனை கிளியைத் தின்றுவிடும். ஆதலால், கிளிக்குப் பூனையைக் கண்டால் அச்சம் அதிகம். பூனையைக் கண்டவுடன், கிளி பயத்தோடு 'கீச்சுக் கீச்சு' என்று கத்தும். ஆதலால், கிளிகளை வளர்ப்பவர்கள் அவைகளைப் பூனையினிடம் அகப்படாதபடி கூண்டில் அடைத்து வளர்ப்பார்கள். கூண்டில் உள்ள கிளிகளுக்குப் பழமும் பால் கலந்த சோறும் ஆகாரமாகும். கிளிகளைப் பிடித்துக் கூண்டில் அடைத்துவைத்தால் அவை இஷ்டப்படி இருக்கமுடியாது.

கிளிக்குப் பேசக் கற்றுக்கொடுத்தால் அது பேசும். அதன் பேச்சைக் கேட்டு யாவரும் இன்பம் அடைவார்கள். ஆனால், நாம் சொன்னதையே அது திருப்பிச் சொல்லும். அதற்குத் தானாகப் பேசத் தெரியாது.

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை.

| | | |
|---|---|---|
| அலகு | பொந்து | மதில் |
| மாடம் | கடினம் | பஞ்சவர்ணம் |

பயிற்சி:—கிளியின் மூக்கு எப்படிப்பட்டது? அதன் உபயோகம் என்ன? கிளியை ஏன் வளர்க்கிறார்கள்? கிளிகள் காட்டில் ——— ——— இருக்கும்.

## 2. ஒரு விநோதக் கதை

முன்னொரு காலத்தில், கோவிந்தன் என்னும் ஒரு சிறுவன் இருந்தான். அவன் அதிக ஏழை. ஆனால், அவன் மிகவும் கெட்டிக்காரன். உபாயத்தினால் பிறரை வெல்வதில் திறமை உள்ளவன். அதனால், அவன் பிறரிடமிருந்து பொருள் சம்பாதித்து வயிறுவளர்த்து வந்தான்.



ஒருநாள் அவன் ஒரு பெரிய பிரபுவின் வீட்டுக்குப் போனான். பிரபு, அவனை, "அப்பா! எங்கே வந்தாய்?" என்று கேட்டார். அதற்கு அவன், "பிரபுவே! பெரிய மலையையும் தலையில் சுமந்து செல்லும் சக்தி எனக்கு உண்டு. அந்த அதிசயத்தைத் தங்களுக்குக் காட்டலாம் என்று இங்கு வந்தேன்" என்றான். பிரபு, அவனைப் பார்த்து, "என்ன! மலையையும்கூடச் சுமந்து செல்லும் சக்தி உனக்கு இருக்கிறதா? அப்படியானால் அதை அவசியம் நான் பார்க்கவேண்டும்" என்றார்.

பிறகு, கோவிந்தன், "அப்படியே. ஆனால், அதற்குமுன் நான் பீமதேவனுக்குப் பூஜை செய்யவேண்டும். அது ஆறுமாதகாலம் நடக்கும். அதற்கு ரூபாய் ஆயிரம் செலவாகும். பூஜை முடியும் வரையில் எனக்கு நல்ல சாப்பாடும்

போடவேண்டும்" என்றான். பிரபு இந்த அதிசயத்தைக்காண ஆவல்கொண்டு அதற்குச் சம்மதித்தார்; அவனுக்கு ஆயிர ரூபாய் பணமும் கொடுத்தார்; ஆறு மாதம் சாப்பாடும் போட்டார்.

பிறகு, பிரபு கோவிந்தனை ஒரு மலையண்டை அழைத்துக்கொண்டு பலருடன் சென்றார். "அப்பா! நீ சொன்னபடி உனக்குச் சாப்பாடும் போட்டேன்; ரூபாயும் தந்தேன். இந்த மலையைச் சுமந்து செல்" என்றார். இந்த அதிசயத்தைக்காணப் பின்னும் அனேகர் கூடினர்.



கோவிந்தன், பிரபுவைப் பார்த்து, "ஐயா! நான் மலையைச் சுமந்துசெல்வது ஒரு பெரிதன்று; மிக எளிதே. நான் மலையைச் சுமந்து செல்வேன் என்றுதானே சொன்னேன். ஆதலால், உங்கள் ஆட்களைக்கொண்டு இந்த மலையை என் தலையில் தூக்கிவைக்கச் சொல்லுங்கள். நான்

அதை எடுத்துக்கொண்டு ஓட்டமாய் ஓடுவேன்" என்றான்.

பிரபு நகைத்து, அவனுடைய உபாயத்தைத் தெரிந்துகொண்டு, அவனுடைய செலவுக்குப் பின்னும் சிறிது பொருள்கொடுத்து அனுப்பினர்.

| | | |
|---|---|---|
| உபாயம் | அவசியம் | ஆவல் |
| திறமை | அதிசயம் | சக்தி |

பயிற்சி :—கோவிந்தன் ஏன் மலையைச் சுமந்து செல்லவில்லை ? பிரபு ஏன் நகைத்தார் ?

தகுந்த சொற்களை அமைக்க:—

உபாயத்தினல் பிறரை ——— திறமை உள்ளவன். மலையைச் சுமந்து செல்வது———.

## 3. புளியமரம்

நீங்கள் புளியமரத்தைப் பார்த்திருக்கலாம். அதன் இலைகள் மிகவும் சிறியவை ; பூக்களும் சிறியவை; காய்கள் பெரும்பாலும் நீண்டு வளைந்து இருக்கும். காய் முற்றிப் பழமாகும். அதன் அடிமரம் பருத்திருக்கும். பருமனான வேர்கள் பூமிக்குள் நாலா பக்கங்களிலும் பரவியிருக்கும்.

ஒரு பழத்தை எடுத்து அதன் ஓட்டை உடைத்தால், உள்ளே பழுப்பு நிறமுள்ள சுளையிருக்கும். அதில் கொஞ்சம் வாயில்போட்டுப் பாருங்கள். அது என்ன சுவை ? சுளைக்குள் விதைகள் இருக்கின்றன. அவற்றைப் புளியங்கொட்டைகள் என்கிறோம். புளியங்கொட்டை மிகவும் கெட்டியானது. ஒரு பழத்தில் ஐந்து அல்லது ஆறு கொட்டைகள் வரையில் இருக்கும்.



புளியங்கன்றில் வேர், தண்டு, இலைப்பாகம் இவை உண்டு. இவை நாளடைவில் வளர்ந்து பெரியவையாகின்றன. தண்டு பருத்து அடிமரமாகிறது. மரத்தின்மேல் உள்ள பட்டை தடிப்பாயிருக்கும். அடிமரத்திலிருந்து பல கிளைகள் உண்டாகின்றன. அவற்றிலிருந்து சிறு கிளைகள் கிளைக்கின்றன. மெல்லிய சிறு கிளைகளை வளார் என்கிறோம்.

சிறு கிளைகளில் பூவும் காயும் உண்டாகும். காய் பழுத்ததும், கிளைகளை உலுக்கினால் பழங்கள் சுலபமாய் உதிர்ந்துவிடும். அவற்றைச் சேர்த்து வீட்டுக்குக் கொண்டுபோய் உடைத்துப் புளி எடுக்கிறார்கள்.

பழக்காலம் ஆனதும், மரம் இலை உதிர்த்துத் தளிர்க்கும்; மறுபடியும் பூத்துக் காய்க்கும். அது

வருஷா வருஷம் ஒருதடவை பூத்துக் காய்த்து நமக்குப் பழங்களைக் கொடுத்துக்கொண்டே வரும். அது முதலில் காய்க்க ஆரம்பிக்கச் சில வருஷங்கள் செல்லும்.

புளியமரம் பல வருஷங்கள் உயிரோடிருக்கும். அதன் அடிக்கட்டை பருமனாக இருக்கும். அது செக்குக்கு உதவும்.

| | | |
|---|---|---|
| வளார் | கிளை | உதிர்த்து |
| சுளை | தண்டு | சுலபம் |

பயிற்சி:—கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:—

மெல்லிய சிறு கிளைகளை ——— என்கிறோம். தண்டு ——— அடிமரமாகிறது.

## 4. கடனுக்குப் புளியமரம்

கருப்பூரில் ஒரு குடியானவனுக்கு ஒரு புளியமரம் இருந்தது. அதில் அவனுக்கு வருஷந்தோறும் அதிகப்புளி கிடைத்தது. அவன் அதை விற்று ஜீவனம் செய்துவந்தான்.

அவனுக்கு அடுத்த வீட்டில் ஒருவன் இருந்தான். அவன் அதிகச் செலவாளி. அவன் அடிக்கடி கடன் வாங்கிவந்தான். கடன்காரர்கள் கடனைத் திருப்பிக்கொடுக்கும்படி கேட்டார்கள். அவர்களுக்குப் பதில் சொல்ல அவனால் முடியவில்லை.

கடைசியாக அவன் ஒரு யோசனை செய்தான். அண்டைவீட்டுக்காரன் ஒரு புளியமரத்தால் ஜீவனம் பண்ணுவதை நினைத்தான். " நமக்கு நூறு மரம் இருந்தால், கடனையும் தீர்த்துவிட்டுக் கையில்

கொஞ்சம் பணமும் வைத்துக்கொண்டு சுகமாகக் காலம் கழிக்கலாம். ஆகவே, நமக்கு இப்போது வேண்டியது, நூறு புளியங்கொட்டை. பணங் கொடுக்காமலே இந்த நூறு கொட்டையைச் சம்பாதித்து விடலாம்" என்று நினைத்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் நூறு புளியங்கொட்டையைக் கொண்டுபோய்த் தன் கொல்லையில் ஊன்றிவிட்டுத் திருப்தியாய் வீடுவந்தான்.

மறுநாட்காலையில் வழக்கம்போலக் கடன்காரர் வந்து கடனைக் கேட்டார்கள். அதற்கு அவன், சிரித்துக்கொண்டு, "இனி உங்கள் கடன் எனக்கு ஒரு பெரிது இல்லை. என்னுடன்



வாருங்கள். உங்கள் கடனுக்கு வழி சொல்லுகிறேன்" என்று சொல்லி அவர்களைக் கொல்லையில் அழைத்துச் சென்றான். அவர்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவன், "இதோ பாருங்கள், புளியங்கொட்டைகளை ஊன்றிவிட்டேன். இவை

நூறு புளியமரங்களாகும். ஒவ்வொரு மரத்திலிருந்தும் வருஷத்தில் இருபது ரூபாய் வீதம் வருமானம் கிடைக்கும். நூறு மரத்திற்கும் மொத்த வரும்படி இரண்டாயிர ரூபாய்க்குக் குறையாது. உங்கள் கடனை முதல் வருஷத்திலேயே தீர்த்துவிடுவேன்" என்றான். அதைக்கேட்டு அவர்கள் நகைத்துச் சென்றார்கள்.

புளியமரம் பயிராகிப் பழம் கொடுக்க அனேக வருஷம் ஆகும். அதுவரைக்கும் கடன்காரர் காத்திருக்க முடியுமா?

| | | |
|---|---|---|
| இரண்டாயிரம் | கடன்காரன் | திருப்தி |
| செலவாளி | ஜீவனம் | தீர்த்துவிடு |

பயிற்சி:—கடன்காரர்கள் ஏன் நகைத்தார்கள்?

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைக்க:—

———கடைசியாகத் தன்———தீர்க்க ஒரு——— செய்தான்.

## 5. சுகவழி

கந்தனும் முருகனும் சகோதரர்கள். ஒரு நாள் அதிக மழைபெய்து வீதியெல்லாம் ஈரமாய் இருந்தது. ஆகையால், அவர்கள் வீட்டுக்குள்ளேயே 'கண்ணும்பூச்சி' ஆட்டம் ஆடிக்கொண்டிருந்தனர். ஒரு தடவை கந்தன் ஒரு பெரிய பெட்டிக்குள் மறைந்துகொண்டான். முருகன் கந்தனைத் தேடினான். எங்கும் அகப்படவில்லை. கந்தன் ஒளிந்துகொண்ட இடத்தை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியில் பெட்டிக்குள்ளிருந்து ஒரு சப்தம் அவனுக்குக் கேட்டது.

உடனே பெட்டியிடம் சென்றான். உள்ளே கந்தன் ஒளிந்துகொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டான். திறந்திருந்த பெட்டியை நன்றாய் மூடிவிட்டான்; உள்ளிருந்த கந்தன் தன்னால் ஆனமட்டும் மூடியைத் திறக்கப் பிரயத்தனப்பட்டான். அவனால் முடியவில்லை.

அந்தச்சமயத்தில் அவர்கள் தாயார் கூப்பிடும் குரல் முருகனுக்குக் கேட்டது. முருகன் தாயாரிடம் போனதும், அவள் அவனுக்கு ஒரு சிறு வேலை இட்டாள். அதைச் செய்து முடித்ததும், அவள் அவனை, "கந்தன் எங்கே காணோம்?" என்று கேட்டாள். முருகன், தன் தாயாரைப் பெட்டியினிடம் அழைத்துச்சென்று, "இதோ! அவனை இதற்குள்போட்டு மூடிவிட்டேன்" என்று சொல்லி நகைத்தான். அவள், "ஐயோ! அவனைக் கொன்றாயா?" என்று அலறிக்கொண்டு உடனே பெட்டியைத் திறந்தாள். பெட்டியின் ஒரு மூலையில் கந்தன் பிணம்போல் விழுந்துகிடந்தான். தாயார் அவனைத் தூக்கி எடுத்துப் படுக்கையில் கொண்டுபோய்விட்டு வைத்தியரை வரவழைத்தாள். முருகன் அதிகத் திகில் அடைந்தான். வைத்தியர் வருவதற்குள் கந்தன் கொஞ்சம் கண்ணைத்திறந்து பார்த்தான். முருகனுக்குச் சந்தோஷம் உண்டாயிற்று. தான் அறியாத்தனத்தால் செய்தது இவ்வளவு விபரீதமாக முடிந்ததே என்று மனவருத்தப்பட்டான். வைத்தியர் சற்றுச் சிகிச்சை செய்ததும் கந்தன் சுகமடைந்தான்.

வைத்தியர், முருகனைப்பார்த்து, "அப்பா! நான் சொல்வதைக் கவனி. நாம் சுத்தமான காற்றைச் சுவாசிக்கிறோம். நாம் வெளிவிடுவது

கெட்ட காற்று. நாம் வெளிவிட்ட காற்றை மறுபடியும் சுவாசிக்கக்கூடாது. கெட்டகாற்று வெளியே போகப்போகச் சுத்தக்காற்று நமக்கு கிடைத்துக்கொண்டிருக்க வேண்டும். கந்தன் பெட்டிக்குள்ளிருந்த நல்ல காற்றையெல்லாம் உட்கொண்டுவிட்டான். பின்னும் சுவாசிக்க நல்ல காற்று இல்லாமல் அவன் வெளிவிட்ட கெட்ட காற்றுத்தான் இருந்தது. வெளியிலிருந்து நல்ல காற்றுவர வழியில்லை. ஆகவே, அவன் வியாதியடைந்தான். பெட்டியைத் திறக்காமல் இன்னும் சற்றுத்தாமதித்திருந்தால் அவன் பிழைத்திருக்கமாட்டான். ஆகவே, நாம் சுவாசிக்கச் சுத்தக்காற்று அவசியம். இல்லாமற்போனால் நாம் வியாதியடைவோம். இதை மனத்தில் வைத்துக்கொள்" என்றார். இதனால், முருகன் நல்ல பாடம் கற்றுக்கொண்டான்.

வியாதியில்லாமல் சுகமாயிருக்க நாம் கவனிக்க வேண்டியவை ஐந்து. அவையாவன :—

1. சுத்தமான காற்றைச் சுவாசிக்கவேண்டும்.

2. சுத்தமான இடத்தில் வசிக்கவேண்டும்.

3. சுத்தமான உணவை உட்கொள்ளவேண்டும்.

4. சுத்தமாக உடம்பை வைத்துக்கொள்ள வேண்டும்.

5. சுத்தமான உடையை உடுக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| சகோதரர் | விபரீதம் | சிகிச்சை |
| பிரயத்தனம் | திகில் | சுவாசி |

பயிற்சி:—மூடிய பெட்டிக்குள் ஏன் காற்று வராது? ஓர் அறைக்குள் காற்று நன்றாய் வரவேண்டுமானால் என்ன வேண்டும்?



## 6. ஆடு

வெள்ளாடு வீட்டு மிருகங்களில் ஒன்று. சாதாரணமாக வெள்ளாடு கருமை, வெள்ளை, பழுப்பு இப்படிப்பல நிறமாயிருக்கும். அதன் உடல்முழுதும் மயிர் அடர்ந்திருக்கும். அதன் கொம்புகள் உயர்ந்தும் நுனி சிறிது வளைந்தும் இருக்கும். அதன்வால் குட்டையானது. அதன் கால்களில் குளம்புகள் இருக்கின்றன. குளம்பு பிளவு உள்ளதாயிருக்கும். செங்குத்தான இடங்களிலும் ஆடு சுலபமாக ஏறக்கூடும்.

ஆடுகளில் வெள்ளாடு, பள்ளாடு, செம்மறியாடு, குறும்பாடு எனப் பலவகை உண்டு. செம்மறி ஆடுகள் பெரும்பாலும் மங்கின சிவப்பு நிறமானவை. அவைகளில் பெரும்பாலும் ஆண் ஆட்டுக்குத்தான் கொம்பு உண்டு; பெண் ஆட்டிற்குக் கொம்பு இல்லை. செம்மறி ஆட்டின் கொம்பு வெள்ளாட்டின் கொம்பைப்போல் இரா

மல் பருத்தும் வளைந்தும் முறுக்கிக்கொண்டும் இருக்கும்.



ஒருவகைச் செம்மறி ஆட்டின் உடல்முழுதும் உரோமம் நீண்டு அடர்ந்திருக்கும். இந்த உரோமம் அதற்குக் குளிர்காலத்தில் குளிரைத் தாங்கப் போர்வைபோல் உபயோகமாகின்றது. கோடைக்காலத்தில் அதற்கு அவ்வளவு நீண்ட மயிர் அவசியமில்லை. ஆதலால், கோடையின் ஆரம்பத்தில் மயிர் உதிர ஆரம்பிக்கும். அந்த மயிர் உதிர்ந்து வீணாகாதபடி மனிதர்கள் அதைக் கத்தரித்து, அதனால் கம்பளம் நெய்வார்கள். இந்தக் கம்பளங்கள் குளிர்காலத்தில் நமக்கு மிகவும் உபயோகமாகும்.

ஆடு தழைகளை ஆவலுடன் தின்னும்; பசும் புல்லையும் மேயும்.

ஆடு சாதுவான பிராணி. அது பால் கொடுக்கும். வெள்ளாட்டின் பால் உடம்புக்குச் சுகத்

தைத் தரும். ஆட்டின்பாலை நன்றாக வடிகட்டிச் சாப்பிடவேண்டும்.

ஆடு சாதாரணமாய் ஒரு தடவைக்கு இரண்டு மூன்று குட்டிகள் போடும். ஆகையால், இதன் இனம் சில வருஷங்களுக்குள் அதிகமாய் விருத்தி அடைகிறது. வெள்ளாட்டை 'எளியோர் பசு' என்று கூறுகிறார்கள்.

ஆடுகளை மேய்ப்பவனுக்கு ஆட்டிடையன் என்று பெயர். அவன் பல ஆடுகளை வைத்திருப்பான். பல ஆடுகள் சேர்ந்திருந்தால் அதற்கு மந்தை என்று பெயர். ஓர் ஆடு போனவழியே அந்த மந்தையிலுள்ள மற்ற ஆடுகளும் செல்லுவது வழக்கம்.

| | | |
|---|---|---|
| போர்வை | கம்பளம் | விருத்தி |
| மந்தை | உரோமம் | செங்குத்து |

பயிற்சி :—ஆடுகளில் என்ன என்ன வகை உண்டு? ஏன் வெள்ளாட்டை 'எளியோர் பசு' என்று கூறுகிறார்கள்? செம்மறியாட்டின் உரோமத்தை ஏன் கத்தரிக்கிறார்கள்?

ஏற்ற சொற்களை அமைக்க :—

———ஆடுகளை மேய்க்கிறான். வெள்ளாட்டை——— ———என்று கூறுகிறார்கள்.

## 7. போலீஸ்காரன்

### (சம்பாஷணை)

மகன்:—அப்பா! இவன் யார்? இவன் ஏன் இம்மாதிரி உடை தரித்திருக்கிறான்?

தகப்பனார்:—இவன் ஒரு டாணைக்காரன். இவனைக் கான்ஸ்டபில் அல்லது போலீஸ்காரன்



என்றும் சொல்லுவார்கள். டாணைக்காரர்கள் அனேகமாய்ச் சிவப்புத் தலைப்பாகையும், காக்கி நிறக் கைச்சட்டை கால்சட்டையும் போட்டுக் கொண்டிருப்பார்கள்.

ம:—அப்பா! இவன் ஏன் இங்கு நின்றுகொண்டிருக்கிறான் ?

த:—இது சாலைகள் பிரியும் இடம். இங்கு வண்டிகளும் ஜனங்களும் ஒழுங்காகப் போகும்படி பார்த்துக்கொள்வது இவனுடைய வேலை. இல்லாவிட்டால் வண்டிகள் ஒன்றோடொன்று மோத அபாயம் நேரும். அல்லது, நடந்து செல்பவர்மேல் வண்டிகள் மோதும். இவை நேராமல் காப்பது இவனுடைய வேலை. பெரிய பட்டணங்களில் வண்டிகள் சாலையில் இடப்புறமாகத்தான் போகவேண்டும் என்று ஒழுங்கு ஏற்படுத்தியிருக்கிறார்கள். அம்மாதிரி சென்றால்

அபாயம் நேராது. எதிர்ப்பக்கத்திலிருந்து வண்டிகள் ஒழுங்காகச் சாலையில் மற்றொரு புறத்தில் வரும். சாலைகள் சந்திக்குமிடத்தில் டாணாக்காரன் நின்றுகொண்டிருப்பான். அவன் நான்கு பக்கங்களிலும் பார்த்துக்கொண்டு வண்டிகள் ஒழுங்காகப் போகும்படி கவனித்து வருவான்.

ம:—அப்பா! டாணாக்காரர் எல்லாருக்குமே இதுதானா வேலை?

த:—இல்லை; அவர்களுக்கு வேறு வேலைகளும் உண்டு. தெருவில் சண்டை சச்சரவுகள் செய்பவர்களைப் பிடித்து மேலதிகாரிகளிடம் ஒப்பிப்பார்கள். இராக்காலத்தில் ஊரைச்சுற்றிக் காவல் காப்பார்கள்; திருடர்களைப் பிடித்துக்கொடுக்க முயற்சி செய்வார்கள்.

ம:—சரிதான். இவர்களுடைய ஆபீஸுக்கு என்ன பெயர்? அது எங்கு இருக்கிறது?

த:—இவர்களுடைய ஆபீஸுக்குப் போலீஸ் ஸ்டேஷன் என்று பெயர். ஒவ்வொரு பெரிய ஊரிலும் ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷன் இருக்கும்.

ம:—இந்த ஆபீஸின் தலைமை அதிகாரி யார்?

த:—அவருக்கு ஸப் இன்ஸ்பெக்டர் என்று பெயர்.

| | | |
|---|---|---|
| போலீஸ்காரன் | ஸ்டேஷன் | ஒழுங்கு |
| தலைமை அதிகாரி | இன்ஸ்பெக்டர் | சச்சரவு |

பயிற்சி:—நாம் சாலையில் எந்தப் பக்கமாக நடந்து சென்றால் அபாயம் நேராது? ஏன்? சாலைகள் சந்திக்குமிடத்தில் ஏன் போலீஸ்காரன் நின்றுகொண்டிருப்பான்?



## 8. காகம்

காகம் நம் வீடுகளுக்குள் வந்து பண்டங்களைத் திருடிச்செல்வதை நாம் பார்த்திருக்கிறோம். காகங்களில் இரண்டுவகை உண்டு. ஒன்று முழுக் கருமை நிறமானது. மற்றொன்று சாம்பல் நிற மான கழுத்தோடு கூடியது.

காக்கையின் அலகு உறுதியாகவும் கூர்மை யாகவும் இருக்கும். ஆதலால், அது தன் ஆகாரத்தைக் கொத்தித்தின்ன இலகுவாயிருக்கும்.

அதன் கால்கள் உறுதியானவை. அவை நடப்பதற்கும் தத்துவதற்கும் ஏற்றவை. ஒவ்வொரு காலிலும் முன்புறத்தில் மூன்று விரல்களும் பின்புறத்தில் ஒரு விரலும் இருக்கும். விரல் நுனியில் கூரிய நகம் உண்டு. அதன் உடல் சிறியது; இலேசானது. சிறகுகள் பெரியவை. ஆகையால் காக்கை நன்றாய்ப் பறக்கும்.

காக்கை முட்டையிட்டுக் குஞ்சுபொரிக்கும். குஞ்சு பெரிதாகும் வரையில் தாய்க்காக்கை அதற்கு ஆகாரம் கொண்டுவந்து கொடுக்கும்.

காக்கை தெருவில் சிந்திக்கிடக்கும் எந்த உணவுப் பொருளையும் தின்னும். அது பிறரிடத்திலுள்ள பொருள்களைக் கவர்ந்து தின்னும். அது, மேயும் மாடுகளின் முதுகில் அடிக்கடி உட்கார்ந்து அவற்றின் மேலுள்ள உண்ணிகளைக் கொத்தித்தின்னும். அழுகின பதார்த்தங்களையும் செத்துப்போன எலி முதலியவற்றையும்கூட அது தின்னும். இப்படிப் பூமியைச் சுத்திசெய்வது தான் அது நமக்குச் செய்யும் உதவியாகும்.

காகம் அதிகாலையில் எழுந்திருக்கும். அது ஏதாவது தின்பண்டத்தைக் கண்டால் பெரும்பாலும் 'கா, கா' என்று கத்தித் தன் இனத்தை அழைக்கும். அவைகளுடன் சேர்ந்து உண்ணும்.

| | | |
|---|---|---|
| தின்பண்டம் | சுத்தி | கவர்ந்து |
| பதார்த்தம் | உண்ணி | இனம் |

பயிற்சி:—காக்கை நமக்குச் செய்யும் உபகாரம் என்ன? காகம் தன் இனத்தை எப்படி அழைக்கும்?

## 9. புறாக்களும் பருந்தும்

ஒரு மரப்பொந்தில் சில புறாக்கள் வசித்து வந்தன. அவை வெளியில் மேய்ந்துகொண்டிருக்கையில் அவைகளை அடித்துத் தின்ன ஒரு பருந்து உயரத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. பருந்தைக்கண்டதும், புறாக்களெல்லாம் பொந்தில் ஒளிந்துகொண்டன. ஆதலால், பருந்து அவைகளைத் தின்ன ஓர் உபாயம் தேடிற்று.




உடனே, அது பொந்தினிடம் பறந்துவந்து புருக்களைப்பார்த்து, "நண்பர்களே! என்னைக் கண்டு நீங்கள் ஏன் அஞ்சுகிறீர்கள்? என்னை உங்களுடைய அரசனாக வைத்துக்கொள்ளுங்கள். உங்களைக் காப்பாற்றுவது என் கடமையாகும். என் வார்த்தையை நம்புங்கள்" எனக் கூறிற்று.

அந்த இனிமையான சொற்களைக் கேட்ட புருக்கள், "ஓ! அரசரே! உமது யோசனையைக் கேட்க மிக்க சந்தோஷம். நீங்கள் பொந்தினுள் வாருங்கள்; எங்கள் அரசராக இருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்" என்று வணக்கமாய் உரைத்தன. அவைகளுக்குப் பருந்தின் வஞ்சனை தெரியவில்லை.

பிறகு, பருந்து பொந்தினுள் போயிற்று; அந்தப் புருக்களின் அரசனாயிற்று; தினம் ஒவ்வொன்

ருகப் புருக்களைத் தின்றுவந்தது. புருக்களெல்லாம் இறந்துபோயின.

பகைவர் சொல்லில் நம்பிக்கை வைக்கலாகாது.

| | | |
|---|---|---|
| நம்பிக்கை | வணக்கம் | வட்டமிடுதல் |
| வஞ்சனை | பகைவர் | உரை |

பயிற்சி :—மேயும் புருக்கள் ஏன் பொந்தினுள் புகுந்தன? புருக்களுக்குப் பருந்து என்ன யோசனை சொல்லிற்று?

சரியான சொற்களை அமைக்க :—

பருந்து புருக்களின்———(நண்பன், பகைவன்).

பகைவர் சொல்லில் நம்பிக்கை———(வைக்கலாம், வைக்கக்கூடாது).

## 10. தென்னைமரம்

தென்னைமரம் மணற்பாங்கான இடங்களில் பயிராகக் கூடியது. அதன் வேர் பூமிக்குள் அதிக ஆழம் செல்லாது. அதற்கு ஆணிவேர் இல்லை. தடித்த சல்லிவேர்கள் பல உண்டு.

தென்னையின் அடிமரம் பருத்தும் மேலே போகப்போகச் சிறுத்தும் இருக்கிறது. இதற்குக் கிளைகள் இல்லை. உச்சியில் சில மட்டைகளே இருக்கின்றன. பனை, ஈந்து முதலிய மரங்களுக்கும் மட்டைகள் உண்டு. தென்னையின் மட்டைகள் விழவிழ மரத்தின்மேல் தழும்புகள் உண்டாகும்.

தென்னைமட்டை நீளமாக இருக்கிறது. நடுவில் நீண்ட நரம்பு ஒன்று உண்டு. அதிலிருந்து இருபுறமும் ஓலைகள் பிரிந்து செல்லுகின்றன.

ஒவ்வோர் ஓலையிலும் நீண்ட நரம்பு ஒன்று இருக்கிறது. அதற்கு ஈர்க்கு என்று பெயர்.



மரத்தின் உச்சியில் மட்டைகளின் இடையில் பாளை இருக்கிறது. பாளை முதலில் மூடியிருக்கும். பிறகு, அது வெடிக்கும். அதில் சிறிய பூக்கள் உண்டாகும். இப்பூக்களுக்கு அதிக வாசனையில்லை. பாளையிலிருந்து சிறு பிஞ்சுகள் தோன்றும். அவைகளுக்குக் குரும்பை என்று பெயர். குரும்பை கொஞ்சம் முற்றினால் இளநீர் ஆகும். இளநீர் முற்றினால் தேங்காய் ஆகும்.

தேங்காயின் மேல் பெரும்பாலும் பச்சையான தோல் இருக்கும். அதற்கு உரிமட்டை எனப் பெயர். மட்டையை உரித்தால் கடினமான ஓடு இருக்கும். ஓட்டை உடைத்தால் உள்ளே இளநீரும் வெண்மையான பருப்பும் காணப்படும். ஓட்டுக்குக் கொட்டாங்கச்சி என்று பெயர்.

தேங்காயிலிருக்கும் இளநீரைக் குடிக்கலாம். தேங்காய்ப் பருப்பு கறி சமைக்க உதவும். பருப்பை உலரவைத்துச் செக்கில் ஆட்டி எண்ணெய்

எடுக்கலாம். தேங்காய் எண்ணெய் நல்ல மண முள்ளது. சிலர் அதைப் பலகாரங்கள் செய்ய உபயோகிக்கிறார்கள். தேங்காய் நாரினால் கயிறு திரிப்பார்கள். கொட்டாங்கச்சியை அகப்பையாகவும் கிண்ணமாகவும் செய்யலாம்.



தென்னைமட்டையைக் கீற்றாக முடைவார்கள். கீற்று வீட்டிற்கு மேலே கூரை போட உதவுகிறது. ஓலையைக் கிழித்து ஈர்க்கு எடுப்பார்கள். ஈர்க்கினால் துடைப்பம் செய்வார்கள். ஈர்க்கு இலை தைக்கவும் உதவும். பாளையைக் கிழித்து வேலி கட்டவும் கீற்றுக் கட்டவும் உபயோகிப்பார்கள். அடிமரம் தூண், அலகு, ஏற்றம் முதலியவற்றிற்கு உபயோகமாகும்.

| | | |
|---|---|---|
| கூரை | குரும்பை | ஏற்றம் |
| ஈர்க்கு | இளநீர் | எண்ணெய் |

பயிற்சி:—தென்னையின் உபயோகம் என்ன? தேங்காயின் பாகங்கள் எவை? தென்னையின் பாகங்களைப் படம் வரைந்து காட்டு.

ஏற்ற சொற்களை அமைக்க:—

தென்னைமரம்———இடங்களில் பயிராகக்கூடியது.

மட்டைகள் விழ விழ மரத்தின்மேல்———உண்டாகும்.

# 11. துருவன்

முன்னொரு காலத்தில் உத்தானபாதன் என்று ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். மூத்த மனைவியின் பெயர் ஸுநீதி. அவளுடைய மகன் துருவன். இளைய மனைவியின் பெயர் ஸுருசி. அவளுடைய மகன் உத்தமன். அரசனுக்கு ஸுருசியிடம் அதிக அன்பு உண்டு.

ஒருநாள் துருவன் தன் தந்தையைப் பார்க்கச் சென்றான். அப்பொழுது அவனுக்கு ஐந்து வயது. அரண்மனையில் உத்தானபாதன் சிங்காதனத்தில் உட்கார்ந்திருந்தான். அவனது மடியில் உத்தமன் இருந்தான். ஸுருசியும் அரசன் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள். துருவன் தகப்பனுடைய மடியில் உட்கார ஆசைப்பட்டான்; அவனது மடியில் ஏறப்பார்த்தான்.

அப்பொழுது ஸுருசி அவனைத் தடுத்து, "துருவா! நீ அரசரின் மடியில் உட்காரக்கூடாது. என் பிள்ளைதான் உட்காரலாம். நீ அவர் மடியில் உட்கார விரும்பினால் கடவுளைக் குறித்துத் தவம் செய்து என் வயிற்றில் வந்து பிறக்க வேண்டும்" என்றாள். அதைக் கேட்ட அரசன் ஒன்றும் சொல்லவில்லை. பார்த்தான் துருவன். மிக்க வருத்தத்துடன் அழுதுகொண்டு தன் தாய் இருக்கும் அரண்மனைக்குப் போனான். அவளுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு காட்டிற்குத் தவம்புரியச் சென்றான். செல்லும் வழியில் ஒரு பெரியவரைக் கண்டான். அவர் பெயர் நாரதர். அவர் அவனுக்கு ஒரு மந்திரத்தைச் சொல்லிக்

கொடுத்தார். காட்டில் ஒரு நல்ல இடத்தில் உட்கார்ந்துகொண்டு குழந்தையாகிய துருவன் தவம் செய்தான். எப்பொழுதும் பெரியவர் சொல்லிக் கொடுத்த மந்திரத்தையே சொல்லிக்கொண்டிருந்தான்.

பல மாதங்களாயின. துருவன் விடாமல் தவம் செய்துகொண்டிருந்தான். கடைசியாகக் கடவுள் அவன் எதிரில் தோன்றினர். அவர், "துருவா! உனக்கு என்ன வேண்டும்? கேள்; தருகிறேன்" என்றார். துருவன் அவரை வணங்கி, "சுவாமி! எப்பொழுதும் உமது அருளே வேண்டும். தயைசெய்து அதைத் தாரும்" என்றான். கடவுள், "அப்பா! அப்படியே தந்தேன். நீ உன் தகப்பனாருடைய ராஜ்யத்தைப் பெற்று அதை நீதியாய் நெடுங்காலம் ஆள்வாயாக. பிறகு, என்றும் அழியாத மேலான பதத்தை அடைவாய்" என்றார்.

பிறகு, துருவன் தன் நாட்டிற்குத் திரும்பி வந்தான். இவ்வாறு நடந்ததை உத்தானபாதன் அறிந்தான். உடனே, அவன் தன் மந்திரி முதலானவருடன் எதிர்சென்று துருவனை அழைத்து வந்தான். அவனையே அரசனாக முடிசூட்டினான். துருவன் பல வருஷங்கள் நீதியுடன் அரசு புரிந்து மேலான பதத்தைப் பெற்றான்.

முயற்சியால் முடியாதது ஒன்றும் இல்லை.

| | | |
|---|---|---|
| அரண்மனை | தவம் | ராஜ்யம் |
| அருள் | முடி | மந்திரம் |

பயிற்சி:—துருவன் ஏன் காட்டுக்குப் போனான்? உத்தானபாதன் ஏன் துருவனை எதிர்கொண்டு சென்றான்?

## 12. கிராம உத்தியோகஸ்தர்கள்

### (சம்பாஷணை)

இராமன் :—அப்பா! யாரோ ஒருவர் தெருவில் வந்திருக்கிறார். உங்களைக் கூப்பிடுகிறார்.

மணியகாரர்:—ஐயா! பணம் கொடுக்கிறீர்களா?

தகப்பனார் :—சாயங்காலம் வாருங்கள். நிச்சயம் கொடுப்பேன்.

ம :—சரி, நாலுமணி சுமாருக்கு வருவேன்.

இ:—அப்பா! இப்போது வந்தவர் யார்? அவருக்கு ஏன் நீங்கள் பணம் கொடுக்கவேண்டும்?

த :—அவர் மணியகாரர். அவர் வரி வசூல் செய்பவர். நாம் கொடுக்கவேண்டிய வரிப்பணத்தைக் கேட்கிறார்.

இ :—வரி என்றால் என்ன ?

த :—நாம் அநுபவிக்கும் நிலங்களுக்காக அரசாங்கத்துக்கு நாம் செலுத்தும் பணமே வரியாகும்.

இ :—அவர் அதை வாங்கி என்ன செய்வார்?

த :—அரசாங்கத்துக்குச் செலுத்திவிடுவார்.

இ :—சரிதான். அவருக்கு வரிவசூல் செய்வதுதானா வேலை ?

த :—அவருக்கு வேறுவேலையும் உண்டு. கிராமத்தில் நடக்கும் சிறிய வழக்குக்களை அவர் விசாரிப்பார் ; ஜனன மரணங்களைக் குறித்துவைப்பார்.

இ:—கிராமசம்பந்தமாக வேறு உத்தியோகஸ்தர்கள் உண்டோ ?

த:—கணக்குப்பிள்ளை என்று ஒருவர் உண்டு.

இ :—அவருக்கு என்ன வேலை ?

த:—கிராம சம்பந்தமான அரசாங்கக்கணக்குக் களை எழுதுபவர் கணக்குப்பிள்ளை. இவர் நாம் பயிரிடும் நிலங்களை அளந்துபார்ப்பார்; நாம் என்ன பயிரிடுகிறோம் என்றும் எழுதுவார். நிலங் களின் அளவுக்குத் தக்கபடி ஒவ்வொருவருக்கும் வரி இவ்வளவு என்று கணக்கிடுவார். கணக்குப் பிள்ளையும் மணியகாரரும் கிராமத்தில் ஆகவேண் டிய அரசாங்க வேலைகளைக் கவனிப்பவர்கள். ஆதலால், இவர்களுக்குக் கிராம உத்தியோகஸ் தர்கள் என்று பெயர்.

இ:—சரி அப்பா! ஒருநாள் ஒருவர் நிலம் அளந்துகொண்டிருந்தார். அவரைக் கணக்குப் பிள்ளை என்று சொன்னார்கள். அவருடன்கூட ஒருவன் இருந்தான். அவன் கையில் ஒரு தடி வைத்திருந்தான். அவன் யார்?

த:—அவன் தலைகாரி. அவன் கணக்குப் பிள்ளை நிலங்களை அளக்கும்போது கூட இருந்து அளப்பான். ஊரைச்சுற்றிக் காவல் காப்பான். இன்னும் கணக்குப்பிள்ளையும் மணியகாரரும் சொல்லும் அரசாங்க வேலைகளைச் செய்வான். சில கிராமங்களில் இவனைப்போல இன்னும் சில வேலைக்காரர்களும் இருப்பது உண்டு.

| | | |
|---|---|---|
| வசூல் | கணக்குப்பிள்ளை | காவல் |
| உத்தியோகஸ்தர் | தலைகாரி | அரசாங்கம் |
| மணியக்காரன் | ஜனனமரணம் | வரி |

பயிற்சி:—கிராமத்தில் அரசாங்க வேலைகளைப் பார்ப் பவர் யார்? தலைகாரியின் வேலை என்ன? மணியகாரருக்கு வரி வசூலைத்தவிர வேறு என்ன வேலை?




## 13. ரெயில்வண்டித்தொடர்

ரெயில்வண்டித் தொடருக்குப் புகைவண்டி என்றும் பெயர். இதில் பிரயாணம் செய்யலாம். இதன் முன்னல் இருக்கும் வண்டிக்கு எஞ்சின் என்று பெயர். அது இரும்பினுல் செய்தது. எஞ் சினில் மூன்று மனிதர்கள் இருப்பார்கள். அவர் களில் ஒருவர் எஞ்சினை ஓட்டுகிறவர். மற்ற இரு வரும் அவருக்கு உதவிசெய்பவர்கள். எஞ்சினில் ஒரு பெரிய அடுப்பு இருக்கும். அதன்மேல் நீண்ட ஒரு தொட்டியில் ஜலம் நிரப்பியிருக்கும். அது கொதித்து நீராவியாக மாறுகிறது. அது எஞ்சினை ஓடச் செய்கிறது.

எஞ்சினுடைய முன்பாகத்தில் ஒரு குழாய் வழியாய்ப் புகை வருகிறது.

எஞ்சினுக்குப் பின்னல் பல வண்டிகளைத் தொடர்ச்சியாகக் கோத்திருப்பார்கள். பிரயாணி

கள் வண்டியில் ஏறிப் பெஞ்சுகளின்மேல் உட்கார வேண்டும். வண்டியில் கதவைத் திறந்துகொண்டு வழியில் நிற்கக்கூடாது.

ரெயில்வண்டித் தொடரில் கடைசி வண்டியில் கார்டு என்னும் உத்தியோகஸ்தர் இருப்பார். அவரே வண்டிக்குக் காவலாக இருப்பவர். அவர் பச்சைக்கொடி ஒன்றும் சிவப்புக்கொடி ஒன்றும் வைத்திருப்பார். பச்சைக்கொடியை வீசினால் அதைக்கண்டதும் எஞ்சின் ஓட்டுபவர் வண்டியை ஓட்டுவார்; சிவப்புக்கொடியை வீசினால் வண்டியை நிறுத்திவிடுவார். இராக்காலத்தில் கொடிகளுக்குப்பதிலாக பச்சை, சிவப்பு நிறமுள்ள விளக்குகளை உபயோகிப்பார்.

ரெயில்வண்டித் தொடர் தண்டவாளங்களின் மேல் செல்லுகிறது. தரையில்போனால் மண்ணில் புதைந்துவிடும். ரெயில்வண்டி ஸ்டேஷனில் நிற்கும்பொழுது சில பிரயாணிகள் வண்டியில் ஏறுவார்கள்; சில பிரயாணிகள் இறங்குவார்கள்.

ஸ்டேஷனுக்கு இரண்டு பக்கங்களிலும் கைகாட்டி மரங்கள் இருக்கின்றன. வண்டி வருவதற்குமுன் அது வரும்பக்கத்துக் கையை இறக்குவார்கள். கை இறங்கினால்தான் வண்டி ஸ்டேஷனுக்குள் வரலாம். கை இறங்காவிட்டால் வண்டியைக் கைகாட்டி மரத்துக்கு வெளியே நிறுத்திவிடுவார்கள்.

| | | |
|---|---|---|
| பிரயாணிகள் | கார்டு | எஞ்சின் |
| தொடர்ச்சி | ரெயில் | தண்டவாளம் |

பயிற்சி:—கார்டு ஏன் கொடியை வீசுகிறார்? இரவில் ஏன் விளக்கை உபயோகிப்பார்?



# 14. குரங்கின் இயற்கை

ஒரு கிராமத்தில் ஒரு வியாபாரி வசித்துவந்தான். அவன் குல்லா தைத்து விற்றுப் பிழைத்து வந்தான். ஒருநாள் அவன் தைத்து வைத்திருந்த குல்லாக்களையெல்லாம் ஒரு கூடையில் எடுத்துக் கொண்டான். அவைகளை விற்பதற்காகப் பட்டணத்துக்குப் புறப்பட்டான்.

அன்று வெய்யில் கடுமையாய்க் காய்ந்தது. சிறிது தூரம்சென்றதும் வியாபாரி களைப்படைந்தான்; கொஞ்சம் இளைப்பாற எண்ணி ஒரு மரத்தடியில் சென்றான்; தன் கூடையைக் கீழே வைத்துவிட்டு அதிலிருந்து ஒரு குல்லாவை எடுத்துத் தலையில் போட்டுக்கொண்டு கீழே உட்கார்ந்தான்; வெய்யிலில் நடந்துவந்த களைப்பினால் அவன் அயர்ந்து தூங்கிவிட்டான். அதைக்கண்ட குரங்குகள் கீழே இறங்கிவந்தன. ஒவ்வொன்

றும் ஒவ்வொரு குல்லாவை எடுத்துத் தலையில் போட்டுக்கொண்டன; பிறகு, மரத்தின்மேல் ஏறி விட்டன.

சிறிதுநேரம் கழித்து, அவன் விழித்துக் கொண்டான்; கூடையைப் பார்த்தான். கூடையில் ஒரு குல்லாவாவது இல்லை. குல்லாக்கள் போனவிதம் தெரியாமல் அவன் தவித்தான்; பிறகு, நான்கு பக்கமும் சுற்றிப்பார்த்தான். குல்லாக்கள் எங்கும் தென்படவில்லை. கடைசியாக மேலே பார்த்தான். மரத்தின்மேல் இருந்த குரங்குகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குல்லாவை வைத்துக்கொண்டிருப்பதைக் கண்டான்.



உடனே, வியாபாரிக்கு வெகுகோபம் வந்தது. குல்லாக்களைக் கீழே போடும்படி குரங்குகளை அதட்டினான். அவை பதிலுக்குப் பல் இளித்துக் கீச்சுக்கீச்சு என்று கத்தின; குல்லாக்களைக்

கொடுக்கவில்லை. வியாபாரிக்கு இன்னது செய்வது என்று தோன்றவில்லை; மனம் வெறுத்துத் தன் தலையிலிருந்த குல்லாவை எடுத்துக் கீழே எறிந்தான். அதைக்கண்ட குரங்குகளும் தம் தலையிலிருந்த குல்லாக்களைக் கழற்றி எறிந்தன. அவைகளைச் சேர்த்து எடுத்துக் கூடையில் போட்டுக்கொண்டு அவன் தன் வழியே சென்றான்.

குரங்குக்குப் பிறர் செய்வதுபோல் தானும் செய்யும் சுபாவம் உண்டு.

| | | |
|---|---|---|
| வியாபாரி | அயர்ந்து | தவித்தான் |
| அதட்டினன் | சுபாவம் | களைப்பு |

பயிற்சி:—வியாபாரியின் குல்லாக்கள் எப்படி காணமற் போயின? அவன் தன் தலையிலிருந்த குல்லாவை என் கீழே எறிந்தான்?

ஏற்ற சொற்களை அமைக்க:—

வெய்யிலில் நடந்து வந்த———வியாபாரி அயர்ந்து ———.

# 15. வாழை

வாழை உஷ்ணமும் நீர்வளமுமுள்ள இடங்களில் நன்ருக வளரும். அதற்கு எப்பொழுதும் ஈரம் வேண்டும். நமது நாட்டில் அனேகர் அதை வீட்டுத் தோட்டங்களிலும் பயிர் செய்கிருர்கள்.

வாழைக்கு விதை இல்லை. குழியை வெட்டி அதில் வாழைக்கன்றை நடவேண்டும். சில காலம் தினந்தோறும் தண்ணீர் ஊற்றவேண்டும். நாளாக நாளாக வாழைக்கன்று குருத்துவிட்டு இலைகள் விரிந்து நன்ருக வளரும். பின்பு அது

மரமாகும். வாழையின் அடியில் பூமிக்குள் கிழங்கு இருக்கும். வேர்களெல்லாம் கிழங்கி லிருந்து தோன்றும். வாழையின் வேர்கள் சிறியவை. வாழைக் கிழங்கிலிருந்துதான் கன்றுகள் உண்டாகி மரமாகின்றன.



வாழைக்குக் கிளை இல்லை. அதன் உச்சி யில் சுமார் பத்து அல் லது பன்னிரண்டு இலைகள் இருக்கும். ஒவ்வோர் இலையும் நீளமாயும் அகலமா யும் இருக்கும். மோத் தை சாய்ப்பதற்கு முந்தி நுனியில் ஒரு சிறிய இலை வரும். அதற்குக் கண்ணாடி இலை என்று பெயர். அதன் பிறகு, மோத்தை வரும். அது தாறு ஆகும். அதன் நுனியில் வாழைப்பூ இருக்கும். பூ ஊதா நிறமானது.

மோத்தையிலிருந்து மடல்கள் ஒவ்வொன்றாக உதிரும். அங்கங்கே பிஞ்சுகள் தோன்றும். அவை முற்றினால் காயாகும். வாழைக்காய்கள் சீப்புச் சீப்பாக இருக்கும். வாழைக் குலைக்குத் தாறு என்று பெயர். ஒரு குலையில் சுமார் ஏழு எட்டுச் சீப்புக் கள் இருக்கும். ஒவ்வொரு சீப்பிலும் சுமார் பத் துப் பன்னிரண்டு காய்கள் இருக்கும். வாழை

ஒரு முறைதான் தாறு போடும். அதனுல் காய்கள் முற்றினவுடன், வாழைக் குலையையும் மரத்தையும் வெட்டிவிடுவார்கள். பின்பு, வாழையைச் சுற்றி லும் முளைத்திருக்கும் கன்றுகள் நன்ருக வளர்ந்து மரமாகும்.

வாழைமரம் முழுதும் பட்டைகளே அடுக்கு அடுக்காய் இருக்கும். உள்ளே தண்டு இருக்கும். அது வெண்மை நிறமானது. தண்டை எடுக்கப் பட்டைகளை உரிக்கவேண்டும்.



வாழைகள் கொஞ்சம் வளர்ந்தவுடன், தோட் டங்களில் பெரிய கிடங்குகளை வெட்டுவார்கள். அவைகளில் தண்ணீர் தேங்கி நிற்கும். ஆத லால், பிறகு அம்மரங்களுக்குத் தண்ணீர் ஊற்றுவ தில்லை.

வாழைக்காய் பசுமை நிறமானது. முற்ருத காய்க்குக் கச்சல் எனப் பெயர். காய் முற்றின

பிறகு பழுக்கும். பழம் மஞ்சள் நிறமானது. சில பழங்கள் வேறு நிறமாயும் இருக்கும். அவை களுக்கு வெவ்வேறு பெயர்கள் உண்டு.

வாழையில் பூவன், மொந்தன், ரஸ்தாளி, பேயன், பச்சை நாடன், பச்சை வாழை, செவ் வாழை, தேன் வாழை முதலிய பலவகை உண்டு. பச்சை வாழைப்பழம் பச்சை நிறமாயும் செவ் வாழைப்பழம் சிவப்பு நிறமாயும் இருக்கும். மலைப்பிரதேசங்களில் ஒருவித வாழை பயிராகிறது. அதற்கு மலைவாழை எனப் பெயர். மலைவாழைப் பழம் அதிக ருசியுள்ளது.

குழந்தைமுதல் பெரியவர்கள் வரையில் யாவ ரும் வாழைப்பழம் தின்பார்கள். வாழைக்காயைக் கறி சமைக்கலாம். தண்டும் பூவும் கறிக்கு உதவும். இலையில் சாப்பிடலாம். சிலர் பட்டை யைத் தைத்து இலையாக உபயோகிக்கிறார்கள். பட்டையிலிருந்து நார் எடுப்பார்கள். நாரினால் புஷ்பம் தொடுக்கலாம். சிலகாலமாக வாழை நாரி லிருந்து துணி நெய்கிறார்கள். சருகினால் தொன்னை தைப்பார்கள். தாறுள்ள வாழைமரத் தைக் கலியாணப்பந்தலில் கட்டுகிறார்கள். இப் படி வாழையின் ஒவ்வொரு பாகமும் நமக்கு உப யோகமாகிறது.

| | | |
|---|---|---|
| கிழங்கு | நீர்வளம் | கச்சல் |
| உஷ்ணம் | கிடங்கு | மோத்தை |

பயிற்சி:—வாழை மரத்தின் படம் ஒன்று எழுது.

# 16. கடிகாரம்

கடிகாரத்தின் முன்புறத்தைப் பார். அதில் என்ன என்ன தெரிகின்றன? பன்னிரண்டு எண்களும் இரண்டு முட்களும் தெரிகின்றன. அவற்றுள் பெரியமுள் நிமிஷத்தையும் சிறியமுள் மணியையும் காட்டும். ஒவ்வோர் எண்ணும் ஒவ்வொரு மணியைக் குறிக்கும்.

இப்பொழுது இரண்டு முட்களும் பன்னிரண்டில் இருப்பதால் பன்னிரண்டு மணி. பெரிய முள்ளை நகர்த்துகிறேன். சிறியமுள்ளும் கொஞ்சம் நகரும். இப்பொழுதுபெரிய முள் மறுபடியும் பன்னிரண்டுக்கு வந்துவிட்டது. சிறிய முள் ஒன்றில் இருக்கிறது. ஆதலால், கடிகாரம் மணி ஒன்று என்பதைக் காட்டுகிறது. பெரியமுள் கடிகார வட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றுகையில் சிறியமுள் தான் இருந்த எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்கு நகர்ந்துகொண்டிருக்கும். பெரியமுள் பன்னிரண்டில் இருக்கும்போது சிறியமுள் எந்த எண்ணில் இருக்கிறதோ அத்தனை மணி என்று சொல்லவேண்டும்.






இப்பொழுது கடிகாரத்தின் ஓரத்திலுள்ள சுற்றுக்கோட்டைக் கவனி. 12 என்பதற்கு நேரே ஒரு தடித்த கோடும் பிறகு ஒவ்வோர் எண்ணுக்கும் நேரே ஒவ்வொரு தடித்த கோடும் இருப்பதைப் பார். இரண்டு எண்களுக்கு இடையிலுள்ள தூரம் ஐந்து பாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாகமும் ஒவ்வொரு நிமிஷத்தைக் குறிக்கும். ஆதலால், பெரியமுள் ஒன்றில் இருந்தால் ஐந்து நிமிஷம், இரண்டில் இருந்தால் பத்து நிமிஷம், மூன்றில் இருந்தால் பதினைந்து நிமிஷம் என்று இப்படிக் கணக்கிடவேண்டும். பெரிய முள் 12 எண்களையும் ஒருமுறை சுற்றினால் 60 நிமிஷம் ஆகும். ஒரு மணிக்கு அறுபது நிமிஷம்; அரைமணிக்கு முப்பது நிமிஷம்; கால் மணிக்குப் பதினைந்து நிமிஷம். முக்கால் மணிக்கு எவ்வளவு நிமிஷம்?

கடிகாரம் மணி காட்டும்.

"காலங்கடவாமல் காரியம் செய்."

| | | |
|---|---|---|
| பாகம் | சுற்றுக்கோடு | ஓரம் |
| இடை | முக்கால் | நிமிஷம் |

பயிற்சி :—மூன்று, ஒன்பதேகால், பன்னிரண்டரை. இந்த மணி நேரங்களைக் கடிகாரப் படம்போட்டுக் குறிக்க.

ஒரு மணிக்கு எத்தனை நிமிஷங்கள்?

மணிக்கு முப்பதுமைல் வேகம் ஓடும் ரெயில்வண்டி பத்துமைல் தூரமுள்ள ஒரு ஸ்டேஷனுக்குச் செல்ல எவ்வளவு நேரம் ஆகும்?

ஏற்ற சொற்களை அமைக்க :—

கடிகாரத்தில் நீண்டமுள் ——— காட்டும்.

அரை மணிக்கு ——— நிமிஷங்கள்.

# 17. லீவுக்கடிதம் எழுதுதல்

(சம்பாஷணை)

கண்ணன் :—கணபதி! நாமிருவரும் நேற்றுப் பள்ளிக்கூடம் போகவில்லையே. உபாத்தியாயர் என்னைமட்டும் இன்று கோபித்துக்கொண்டாரே. உன்னைக் கோபித்துக்கொள்ளவில்லையே. ஏன்?

கணபதி :—கண்ணு! நான் கடிதம் எழுதி முன்னமேயே அவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டிருந்தேன். ஆதலால்தான், என்னை அவர் கோபிக்கவில்லை.

கண்ணன் :—கணபதி! என்ன கடிதம் எழுதிக் கொடுத்தாய்? எதற்காகக் கடிதம் எழுதுகிறது?

கணபதி :—நான் மறுநாள் வரமுடியாததற்கு அனுமதி கொடுக்கும்படி கடிதம் எழுதிக்கொடுத்தேன். அதைத்தான் லீவுலெட்டர் என்று சொல்லுகிறோம்.

கண்ணன் :—லீவுலெட்டர் எப்படி எழுதுகிறது?

கணபதி :—இதோ பார். இதில் இருக்கிற மாதிரி நான் எழுதினேன்.

" கும்பகோணம்,
9—8—1935.

கும்பகோணம், பெரிய தெரு, முனிஸிபல் எலிமென்டரி பாடசாலை, மூன்றாவது வகுப்பு உபாத்தியாயரவர்களுக்கு, மேற்படி வகுப்பு மாணவன் கணபதி வணக்கமாய் எழுதிய லீவுக்கடிதம்:

நாளைத்தினம் (10-8-35, புதன்கிழமை) நான் என்னுடைய தமக்கையின் கலியாணத்திற்காகத் தஞ்சாவூருக்குப் போகவேண்டியிருக்கிறது. ஆதலால், தயைசெய்து, நாளை ஒருநாள் மட்டும் எனக்கு லீவு கொடுக்கும்படி வணக்கமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் பணிவுள்ள மாணுக்கன்,
கணபதி."

இந்த மாதிரி எழுதி அதை மடித்தோ (அல்லது ஓர் உறையில் வைத்தோ)

"மூன்றுவது வகுப்பு உபாத்தியாயரவர்களுக்கு,
முனிஸிபல் எலிமெண்டரி பாடசாலை,
பெரிய தெரு,
கும்பகோணம்."

என்று மேல்விலாசம் எழுதவேண்டும். பிறகு, அதை உபாத்தியாயரிடம் கொடுத்தால், அவர், போகும்படி அனுமதி கொடுப்பார். அனுமதியின் மேல் பள்ளிக்கூடம் போகாமலிருந்தால் நம்மைக் கோபிக்கமாட்டார்.

கண்ணன்:—கணபதி! சரிதான்; இனி நானும் அப்படியே செய்வேன். வந்தனம்.

வந்தனம் அனுமதி விலாசம்

பயிற்சி:—உன் மாமாவைப் பார்க்கப்போகும் பொருட்டு உன் உபாத்தியாயருக்கு ஒரு லீவுலெட்டர் எழுது.

## 18. காக்கையும் நரியும்

### (ஆனந்தக் களிப்பு)

('நந்தவனத்தில் ஓர் ஆண்டி' என்ற மெட்டு)

ஓடி விளையாடும் பையன்—கையில்
உள்ள வடையை ஒரு கருங் காக்கை
நாடிப் பறித்துப் பறந்தே—உயர்
நாவல்மரத்தி லமர்ந்தது தின்ன.
அக்கருங் காக்கையின் வடையை—மெல்ல
அபகரித் துண்பதற் காசை கொண்டதனுல்
பக்குவ மாக மொழிந்தே—அதைப்
பறிக்க முயன்றது பார்த்தவோர் நரியே.
நரியந்தக் காகத்தைப் பார்த்தே—இந்த
நானிலத் தில்உமைப் போலே அழகும்
குரலுமு டையவர் உண்டோ—என்று
கூறிக் களிப்புறச் செய்துபின் சொல்லும்:
" அருமை மிகுகாக்கை யாரே—நானிங்
கலைந்து திரிந்து களைப்புற்று வந்தேன்
ஒருமுறை உமது குரலைக்—கேட்டால்
உள்ளங் களிக்கு முடற்களைப் பும்போம். "
என்றது வஞ்சகமாக—அதன்
எண்ண மறியாமல் ஏமாறுங் காக்கை
நன்றெனப் பாடுதற் கெண்ணிச்—சற்றும்
ஞான மில்லாமல் திறந்தது வாயை.
விழுந்தது வடை; அதை நரிதான்—மெத்த
விருப்புடன் கௌவி விரைந்தது; காகம்
விழித்தது வடையை இழந்தே—இது
வீணர் மொழியால் விளையும் பயனும்.



# 19. சிங்கமும் சுண்டெலியும்

ஒரு காட்டில் ஒரு சிங்கம் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்தது. அப்பொழுது பக்கத்தில் ஒரு சுண்டெலி விளையாடிக்கொண்டிருந்தது. சிங்கத்தின்மேல் அது தற்செயலாய் விழுந்து ஓடி அதன் தூக்கத்தைக் கலைத்தது. உடனே, சிங்கம் விழித்துக்கொண்டது. அது, சுண்டெலியைத் தன் பாதத்தால் பிடித்துக்கொண்டு, "ஏ! அற்பப் பயலே! உனக்கு இவ்வளவு தைரியமா? நீ என் தூக்கத்தைக் கலைத்துவிட்டாயே. உன்னை இதோ நசுக்கி விடுகிறேன்" என்றது.

அதைக்கேட்டு, சுண்டெலி நடுக்கமடைந்தது. அது, சிங்கத்தைப்பார்த்து, "ஐயா! தாங்கள் தூங்கிக்கொண்டிருந்ததை நான் கவனிக்கவில்லை. நான் தெரியாமல் தங்கள் தூக்கத்தைக் கலைத்து

விட்டேன். அது தவறுதான். ஆயினும், நான் வேண்டுமென்று செய்யவில்லை. என் பிழையைப் பொறுத்து எனக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள். தங்களுக்கு என்னால் ஆகக்கூடிய உதவியைச் செய்வேன்" என்றது.

சிங்கம், "இந்த அற்பப் பிராணி, மிருகங்களுக்கு அரசனான எனக்கு என்ன உதவி செய்யக் கூடும்? எப்படியாயினும் ஆகட்டும். இந்தச் சிறு பிராணியைக் கொல்லவேண்டாம்" என்று நினைத்தது.

பிறகு, அது சுண்டெலியைப்பார்த்து, "ஏ! அற்பப்பயலே! உன் பிழையை மன்னித்தேன். ஓடிப் பிழைத்துப்போ" என்றது. சுண்டெலியும் சந்தோஷத்துடன் ஓடிப்போய்விட்டது.



பல மாதங்களுக்குப் பின் ஒருநாள் சிங்கம் இரைதேடச் சென்றது. அப்பொழுது அது ஒரு வலையில் சிக்கிக்கொண்டது. அதனால் வெளியில் வர முடியவில்லை. உடனே, அது இரைந்து கர்ஜித்தது. அந்தக் கர்ஜனையைச் சுண்டெலி

கேட்டது. "இது நம்மைக் காப்பாற்றிய சிங்கத்தின் கர்ஜனையல்லவா? அதற்கு ஏதோ ஓர் ஆபத்து உண்டாயிருக்கவேண்டும்" என்று அது நினைத்தது. உடனே, அது, சிங்கம் இருக்குமிடத்தைத் தேடிப்போயிற்று; சிங்கம் வலையில் மாட்டிக்கொண்டிருப்பதைக் கண்டது; தன் கூர்மையான பற்களால் அந்த வலையைத் துண்டு துண்டாக அறுத்துச் சிங்கத்தை விடுவித்தது. சிங்கத்திற்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று.

எதையும் அற்பமென்று இகழலாகாது.
"சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்"

| | | |
|---|---|---|
| தைரியம் | தற்செயலாய் | மகிழ்ச்சி |
| நடுக்கம் | கர்ஜனை | பிழை |
| தவறு | ஆபத்து | உயிர்ப்பிச்சை |

பயிற்சி :—சரியான பதத்தை உபயோகி :—

1. சுண்டெலி சிங்கத்தின்மேல்———விழுந்தது (தற்செயலாய், வேண்டுமென்று).
2. சுண்டெலி சிங்கத்தினிடத்தில்———காட்டிற்று (சந்தோஷத்தை, திறமையை, நன்றியை).
3. எதையும் அற்பமென்று———.

# 20. தபால்

## (முதற் பாகம்)

## (சம்பாஷணை)

ஆறுமுகம் :—அப்பா! இதோ தபால்காரன் வருகிறான்.

தகப்பன் :—இன்று நமக்கு ஏதாவது கடிதம் உண்டா என்று தபால்காரனைக் கேள்.



ஆறுமுகம் :—ஐயா! எங்களுக்கு ஏதாவது கடிதம் உண்டா?

தபால்காரன் :—ஆம். இரண்டு கடிதங்கள் வந்திருக்கின்றன.

ஆறுமுகம் :—அப்பா! இரண்டு கடிதங்கள் வந்திருக்கின்றன. இவை இரண்டும் ஒன்றுபோல் இருக்கவில்லையே. இவை இரண்டுக்கும் வித்தியாசம் என்ன?

தகப்பன் :—இது கார்டு, இது கவர். கார்டு என்பது ஒரு தடித்த காகிதம். அதில் ஒரு பக்கத்தில் சமாசாரத்தை எழுதி மற்றொரு பக்கத்தில் விலாசத்தை எழுதவேண்டும். விலாசம் எழுதும் பக்கத்தின் இடப்பாதியிலும் சமாசாரங்களை எழுதலாம். அதில் கொஞ்ச சமாசாரம்தான் எழுத முடியும். கவர் அப்படி அன்று. அது ஓர் உறை. அதிக சமாசாரமோ, பிறர் பார்க்கக்கூடாத இரகசிய சமாசாரமோ எழுதியுள்ள கடிதத்தை அதற்

குள்வைத்து உறையை ஒட்டி அதன்மேல் விலாசம் எழுதி அனுப்பலாம்.

ஆறுமுகம் :—கார்டுக்கும் கவருக்கும் தபாற் கூலி ஒன்றுதானா?

தகப்பன் :—இல்லை. கார்டுக்குத் தபாற்கூலி முக்காலணா; கவருக்குத் தபாற்கூலி ஓர் அணா. ஆனால், கவரின் எடைக்குத் தக்கபடி தபாற்கூலி அதிகமாகும்.

| | | |
|---|---|---|
| தபாற்கூலி | கவர் | சமாசாரம் |
| கார்டு | உறை | இரகசியம் |

பயிற்சி :—கவரை ஏன் உபயோகிக்கிறோம்?

[குறிப்பு :—பலவிதத் தபால்தலைகளைக் காட்டி அவற்றின் நிறவித்தியாசத்தையும் அவற்றில் எழுதியிருப்பதைக்கொண்டு விலையைக் கண்டுபிடிப்பதையும் பிள்ளைகளுக்குக் கற்பிக்கலாம்.]

# 21. தபால்

## (இரண்டாம் பாகம்)

## (சம்பாஷணை)

தகப்பனார் :—ஆறுமுகம்! இன்று உனக்குத் தபால் போய்ச் சேரும் முறையைச் சொல்லுகிறேன்.

இந்தப் பாடத்தி லுள்ள படங்களைக் கவனி. முதல் படத்தில் ஒருவன் தான் எழுதின கார்டைத் தபாலாபீஸுக்குப் போய்த் தபால்



பெட்டியில் போடுகிறான். தபால் பெட்டியின் முன்புறத்தில் தபால்கள் எடுக்கப்படும் காலம் எழுதியிருக்கிறது. பட்டணங்களில் வீதிகளிலும் தபால் பெட்டிகள் வைக்கப்பட்டிருக்கும். அவற்றிலும் தபால்களைப் போடலாம்.

தபால்காரன் குறித்தகாலத்தில் பெட்டியைத் திறக்கிறான், பார். அதிலுள்ள கடிதங்களையெல்லாம் சேர்த்து எடுத்துக் கொள்வான்.




பின்பு, அவன் கடிதங்களை யெல்லாம் தபாலாபீஸிற்குள் கொண்டுபோவான்; அங்கே அவன் அவைகளுக்கு முத்திரை அடிப்பான். பிறகு, அவைகளைப் போஸ்ட்மாஸ்டரிடம் கொடுப்பான். அவர், அவைகளை வாங்கிப் பார்த்து ஒரு பையில் போட்டுக் கட்டி அரக்கு முத்திரை வைத்து மெயில் பியூனிடம் கொடுப்பார்.



அவன் பையை எடுத்துக்கொண்டு ரெயிலடிக்குப் போவான். அதிகத்

தபால் சேரக்கூடிய பெரிய பட்டணங்களில் தபால் பைகளை ஒரு மோட்டார் வண்டியில் போட்டுக்கொண்டு போவான். அங்கு ரெயில்வண்டி வந்ததும், தபால் பையை, ரெயில்வண்டியிலுள்ள மெயில் உத்தியோகஸ்தரிடம் கொடுப்பான்.

அவர் அந்தப் பையை வாங்கிப் பிரிப்பார். பின்பு, ஒவ்வோர் ஊருக்குமுள்ள கடிதங்களையெல்லாம் ஒவ்வொரு தனிப்பையில் போட்டுக் கட்டுவார்; அந்த அந்த ஸ்டேஷன் வந்ததும் அந்த ஊர்ப்பையை அந்த ஊர் மெயில் பியூனிடம் கொடுப்பார்.




அதை அவன் தபாலாபீஸுக்குக் கொண்டு போவான். அங்கே போஸ்ட்மாஸ்டர் பையைப் பிரிப்பார். தபால்காரன் தபால்களுக்கெல்லாம் அந்தத் தபாலாபீஸின் முத்திரையை அடிப்பான். பிறகு, தபால்காரன் விலாசங்களைப் பார்த்துப் பட்டுவாடா செய்வான்.

| | | |
|---|---|---|
| பட்டுவாடா | பட்டணம் | போஸ்ட்மாஸ்டர் |
| அரக்கு | மெயில் | முத்திரை |

பயிற்சி:—தபாலில் முத்திரை ஏன் போடுகிறார்கள்? தபால்களில் ஏன் விலாசம் சரியாக எழுதவேண்டும்? தபால் முத்திரையில் என்ன என்ன தெரியும்? ஒரு கார்டின் பிரயாணத்தைச் சொல்லு.

## 22. நெற் பயிர்

நெல் என்பது, பலவகைத் தானியங்களில் முக்கியமானது. அதன் மேலுள்ள தோல் மஞ்சள் நிறமானது. சிலவற்றில் தோல் கொஞ்சம் சிவப்பாகவும் இருக்கும். இந்தத் தோலுக்கு உமி என்று பெயர். உமியை நீக்கிஞல் உள்ளே அரிசி இருக்கும். அரிசி அனேகமாய் வெண்மை நிறமாய் இருக்கும் இந்த அரிசிதான் நமது தேசத்தில் பலருக்கு உணவாகின்றது. அது எப்படிக் கிடைக்கிறதென்று தெரிந்து கொள்ளுவோம்.



நெல் என்பது புல்போன்ற ஒருவிதப் பயிரின் காய். அந்தப் பயிருக்கு நெற்பயிர் எனப்பெயர். நெல் விளையும் நிலத்திற்கு நன்செய் என்று பெயர். கம்பு, சோளம் முதலியவை பயிராகும் நிலத்திற்குப் புன்செய் என்றுபெயர்.

நெற்பயிருக்கு அதிக உஷ்ணமும் ஈரமும் வேண்டும். இவை அதிகமாயுள்ள நாடுகளில் அது நன்ருய்ப் பயி

ராகும். அப்படிப்பட்ட நாடுகளில் நமது தென்னிந்தியாவும் ஒன்று.

நெல் பயிரிடுவதில் இரண்டுவிதம் உண்டு. நிலத்தைப் புழுதியாக்கி மழைபெய்தபோது நெல்லைத் தெளித்து முளைக்கவிடுவது ஒன்று. நாற்று நட்டுப் பயிர்செய்வது மற்றொன்று. அதாவது:— நிலத்தில் கொஞ்சபாகம் நன்றாக உழுது சேறாக்கி



Photo: Klein and Peyerl.

அதில் நெல்விதைகளை நெருக்கமாக விதைத்து வைப்பார்கள். இந்த இடத்திற்கு நாற்றங்கால் என்று பெயர். பிறகு, அதில் வேண்டிய அளவு ஜலம் பாய்ச்சி வருவார்கள். சிலநாளில் விதைகள் முளைக்கும். அது பார்வைக்குப் புல்போல் இருக்கும். பிறகு, மீதி நிலங்களைச் சேடையாக்கி உழுதுவருவார்கள். அவற்றில் எரு, தழை முதலியன போடுவார்கள். நிலத்தைப் பரம்படித்துச் சமமாக்குவார்கள். நாற்றங்காலில் உள்ள நாற்றுக்

களை வேரோடு பறிப்பார்கள். பிறகு, அவைகளை நிலங்களில் நடுவார்கள். அந்தப் பயிர் நன்ருய் வளரும்.

பிறகு, அடிக்கடி வயலில் உண்டாகும் புல் பூண்டுகளைக் களைந்து விடுவார்கள். அதற்குக் களைபறித்தல் என்று பெயர். வயலுக்கு, அவ்வப்போது வேண்டிய அளவு தண்ணீர் பாய்ச்சி வரவேண்டும். தண்ணீர் அதிகமாயிருந்தால் வடியச் செய்யவேண்டும்.

நெற்பயிர் வளர்ந்ததும், அதன் நுனியில் கதிர்வரும். கதிரில் நெற்கள் இருக்கும். நெல் முற்றிய பிறகு கதிர்களைத் தாளுடன் அரிவாளால் அறுப்பார்கள். அந்த அரிகளைக் கட்டுக்கட்டி அடிக்கவேண்டிய இடத்திற்குக் கொண்டுபோவார்கள். அதற்குக் களம் என்று பெயர். அங்கே அரிகளைத் தரையில் அடிப்பார்கள். நெல்லும் வைக்கோலும் வேறுவேருகும். வைக்கோலை அங்கேயே போராகப் போடுவார்கள். நெல்லெல்லாம் களத்தில் சேர்ந்திருக்கும். அதைத் தூற்றிப் பதரை நீக்குவார்கள்; பிறகு, நெல்லை மட்டும் அளந்து மூட்டையாகக்கட்டி வீட்டிற்குக் கொண்டுபோவார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு, அந்த வைக்கோல்களைப் பரப்பிப்போட்டு அவைகளின்மீது மாடுகளை விட்டு மிதிக்கும்படி செய்வார்கள். இதற்குப் போரடித்தல் எனப் பெயர். இதனுல் வைக்கோலில் தங்கியிருந்த நெற்களெல்லாம் கீழே விழுந்துவிடும். வைக்கோல் மாட்டுக்கு உணவாகும். வைக்கோலை வீட்டுக் கூரைகளின்மேலே போட்டு மூடுவதும் உண்டு.

"நெற்பயிர் விளை"

| | | |
|---|---|---|
| பயிர் | வைக்கோல் | களம் |
| நாற்று | பரம்பு | புன்செய் |
| அரி | நாற்றங்கால் | நன்செய் |

பயிற்சி:—நெற்பயிர் தன் சரித்திரத்தைச் சொல்வது போல் நீ சொல். புன்செய்ப் பயிர்கள் எவை? எரு, தழை இவைகளை நிலத்துக்கு எப்போது போடவேண்டும்?

## 23. நல்லொழுக்கம்

ஒவ்வொருவரும், சிறு பிராயம் முதலே, நல்லொழுக்கம் உடையவர்களாயிருப்பது அவசியம். நல்லொழுக்கம் உடையவர்களை யாவரும் மெச்சுவார்கள். இந்த நல்லொழுக்கம் குழந்தைப் பருவத்திலிருந்தே பழக்கத்தில் வரவேண்டும். அப் பழக்கத்தினால் நாளடைவில் அது மேன் மேலும் விருத்தியடையும்; கடைசியில் அப் பழக்கமுடையவருக்கு நன்மை உண்டாகும். சிறுவர்கள் கைக்கொள்ளவேண்டிய நல்லொழுக்கங்களாவன :—

விடியற்காலையில் எழுந்து கடவுளைத் தொழவேண்டும்; உடனே பெற்றோர்களை வணங்கவேண்டும். பல் விளக்கி முகம் கை கால்களைச் சுத்தம் செய்துகொள்ளவேண்டும். பின்பு நீராடவேண்டும். 'கந்தையானாலும் கசக்கிக்கட்டு' என்றபடி, ஆடைகளை நன்றாய்த் துவைத்து உலர்த்தவேண்டும். பின்பு சுத்தமான உலர்ந்த ஆடைகளைத் தரித்துக்கொள்ளவேண்டும். எப்பொழுதும் சுத்தமாயிருக்கவேண்டும்.

பாடம் படிக்கும்பொழுது கவனத்துடன் படிக்கவேண்டும். படிக்கும் விஷயங்கள் எவை என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். கணக்குகளைப் பிழையில்லாமலும் விரைவாகவும் போடவேண்டும். எழுதும்பொழுது, எழுத்துக்களைப் பார்ப்பதற்கு அழகாயிருக்கும்படி நன்ருக நிறுத்தி எழுதவேண்டும். வீட்டில் செய்யும்படி உபாத்தியாயர் கொடுத்த வேலைகளை அவர் சொல்லியபடியே செய்யவேண்டும். தெரியாத விஷயங்களைத் தெரிந்த பெரியோர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு காரியத்தையும் காலந்தவருமல் செய்யவேண்டும்.

சரியான காலத்தில் பள்ளிக்கூடத்திற்குச் செல்லவேண்டும். பள்ளிக்கூடம் போகும்போதும் திரும்பி வீட்டிற்கு வரும்போதும் வழியில் சண்டை சச்சரவு செய்யக்கூடாது. பள்ளிக்கூடத்தில் அமைதியாயிருந்து உபாத்தியாயர் சொல்வதைக் கவனமாய்க் கேட்கவேண்டும். உபாத்தியாயரிடம் வணக்கமாயும் மரியாதையாயும் இருக்கவேண்டும். மற்றப் பிள்ளைகளிடம் அன்பாயிருக்கவேண்டும். அவர்களுக்கு எந்த விதமான இடையூறும் செய்யலாகாது.

மாலை வேளையில் உலாவப்போதல், தேகப் பயிற்சி செய்தல், நல்ல பிள்ளைகளுடன் விளையாடுதல் முதலியன அவசியம். அவற்ருல், மனத்துக்கு இன்பம் உண்டாகும்; தேகத்திற்கு நல்ல பலம் உண்டாகும்.

இராக்காலங்களில் பாடங்களைச் செவ்வையாய்ப் படிக்கவேண்டும். நாம் என்ன படித்தோம் என்பதைக் கவனித்துத் தெரிந்துகொள்ளவேண்

டும். படித்ததிலுள்ள கருத்தைத் தெரிந்து கொண்டு அதன்படி நடக்கவேண்டும்.

இவைகளைத் தவிர, பெரியோர்களிடம் மரியாதையாக இருக்கவேண்டும். அவர்கள் சொற்படி நடக்கவேண்டும். எப்பொழுதும் உண்மையையே பேசவேண்டும். நன்றாய்ப் படித்து வகுப்பில் முதற் பையனாவதற்கு முயலவேண்டும். இப்படிச் செய்துவந்தால் மேன்மை அடையலாம்.

"உயிரிற் சிறந்தது ஒழுக்கமுடைமை"

| | | |
|---|---|---|
| பருவம் | பிராயம் | இடையூறு |
| கருத்து | விஷயம் | அமைதி |

பயிற்சி:—ஏற்ற சொற்களை அமைக்க:—

ஆடைகளை நன்றாய்த்———உலர்த்தவேண்டும்.

சுத்தமான———ஆடைகளைத்———.

## 24. உபகாரம் வீண்போகாது

ஒரு புறா மரக்கிளையொன்றில் உட்கார்ந்திருந்தது. அம்மரம் ஓர் ஆற்றங்கரையில் இருந்தது. அப்பொழுது ஓர் எறும்பு ஆற்றில் விழுந்து தத்தளித்துக்கொண்டு மிதந்து வந்தது. அதைப் புறா பார்த்தது. உடனே, புறா ஓர் இலையைப் பறித்து ஆற்றில் போட்டது. எறும்பு இலையின் மேல் ஏறிக்கொண்டது. பிறகு, அந்த இலை காற்றினால் கரையோரத்தில் ஒதுங்கியது. எறும்பு கரையில் ஏறிக்கொண்டது.

சிறிது நேரத்திற்கெல்லாம் வேடனொருவன் அங்கு வந்தான். அவன் புறாவைக் கொல்ல எண்ணிக் குறிபார்த்தான். மரத்தின்மேல் இருந்த புறா வேடனைக் கவனிக்கவில்லை. ஆனால், வேடன்



புருவைக் கொல்லக் குறிபார்ப்பதை எறும்பு கவனித்தது. உடனே, அது வேடனிடம் விரைந்து சென்று அவன் காலைக் கடித்தது. வேடன் வலி பொறுக்கமுடியாமல் ஓ என்று அலறினான். அந்தச் சத்தத்தைக்கேட்ட புரு பறந்துபோயிற்று.

நல்லவர்களுக்கு உபகாரம் செய்தால் அது வீண்போகாது.

| | | |
|---|---|---|
| ஆற்றங்கரை | கரையோரம் | பொறுத்தல் |
| தத்தளித்து | குறிபார் | அலறினான் |

பயிற்சி:—புரு ஏன் இலையைப் போட்டது? வேடன் ஏன் புருவைக் கொல்லவில்லை?

தகுந்த பதத்தைச் சேர்:—

வேடன்———அலறினான் (வலியினால், சந்தோஷத்தினால், கோபத்தினால்).



## 25. யானை

யானை நிலத்தில் வாழும் மிருகங்களில் மிகப் பெரியது. அதன் தலையும் உடலும் மிகப் பெரியவை.

அதன் கழுத்துக் குட்டையாகவும் கனமாகவும் இருக்கும். அதனால்தான் பாரமான தலையை அது தாங்குகின்றது. கழுத்துக் குறுகியிருப்பதால் யானை தன் தலையை நன்றாய்த் திருப்ப முடியாது. ஆதலால், எதையாவது திரும்பிப் பார்க்க வேண்டுமானால் யானை தன் உடல் முழுவதையுமே திருப்பும்.

மேலும், அது குனிந்து தன் ஆகாரத்தை எடுக்கமுடியாது. ஆதலால், அதற்கு ஆகாரத்தை எடுத்து வாயில் போட்டுக்கொள்ளக் கைபோன்ற ஓர் உறுப்பு முகத்தில் நீண்டு தொங்குகிறது.

அதற்குத் துதிக்கை எனப் பெயர். துதிக்கையின் நுனியில் விரல்போல் சதை நீண்டிருக்கும். அதனால் யானை குண்டூசி முதலிய சிறு பொருள்களையும் பொறுக்கி எடுக்கும். இந்தத் துதிக்கைதான் யானைக்கு நாசியாகவும் உதவுகிறது. அதன் வாய் துதிக்கைக்கு அடியிலிருக்கிறது. யானை தன் துதிக்கை நிறையத் தண்ணீரை உறிஞ்சி வாயில் ஊற்றிக்கொள்ளும்.

யானையின் கண்கள் சிறியவை. ஆயினும், அவை கூர்மையான பார்வையுடையன. அதன் காதுகள் பெரியவையாயும் முறம்போல அகன்றவையாயும் இருக்கின்றன. அதன் வால் அதிக நீளமாயில்லை. வாலின் நுனியில் மயிர் கற்றையாக இருக்கும்.

யானையின் கால்கள் பருமனாயும் உறுதியாயும் இருக்கும். ஆதலால், அவை அதன் பருத்த உடலைத் தாங்குகின்றன. கால்களின் நுனியில் குளம்புகள் இல்லை. ஆனால், நகங்கள் உண்டு. அவை காலோடு ஒட்டியிருக்கும்.



ஆண் யானையின் இரண்டு கடைவாயிலும் இரண்டு பற்கள் நீளமாக வளர்ந்திருக்கும். அவைகளுக்குத் தந்தம் என்று பெயர். பெண் யானைகளுக்குத் தந்தம் இல்லை. இருந்தாலும், மிகவும் சிறியனவாகவே இருக்கும்.

தந்தம் அதிக விலையுள்ளது. அதனால், அழகிய பொம்மை, கத்திப்பிடி, பொத்தான், சிமிழ் முதலியவை செய்யலாம். யானை இந்தத் தந்தங்களால் தன் விரோதியுடன் சண்டை செய்யும்.

யானை கரும்பு நாணல் முதலியவைகளையும், இலை தழைகளையும் தின்னும்; அரிசி, தேங்காய், முதலியவற்றையும் தின்னும்.

யானை காட்டு மிருகம். அதை மனிதர் பிடித்துப் பழக்குகிறார்கள். பழக்கின யானை வேலை செய்யும்; பாரமான கட்டைகளை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கும். யானையின்மீது அம்பாரி வைத்து அரசர்களும் கனவான்களும் ஏறிப்போவதுண்டு. யானையை ஓட்டுபவனுக்குப் பாகன் என்று பெயர்.

யானை, பாகனுடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்து வேலைசெய்யும். யானைக்கு ஞாபக சக்தி அதிகம். யாராவது ஒருவர் அதற்குக் கெடுதி செய்தால் அதை மறவாது; சமயம் நேரும்போது, அவர்களுக்குத் திரும்பக் கெடுதலைச் செய்யும். ஆதலால், யானையினிடத்தில் குறும்பு செய்யலாகாது.

"யானை இருந்தாலும் ஆயிரம் பொன்;
இறந்தாலும் ஆயிரம் பொன்"

| | | |
|---|---|---|
| துதிக்கை | ஞாபகம் | குறும்பு |
| தந்தம் | பாகன் | அம்பாரி |

பயிற்சி:—யானை மனிதருக்கு எப்படி உபயோகப்படும்? யானைக்கு ஏன் தீங்கு செய்யக்கூடாது?



# 26. குருடர் யானையைக் கண்ட கதை

ஒரு காலத்தில், ஆறு குருடர்கள் யானையைப் பார்க்க எண்ணினார்கள்; அவர்களை ஒரு சிநேகி தன் யானையிடம் கொண்டுபோய் விட்டான். அவர்கள் யானையை எப்படிப் பார்க்கமுடியும்? ஆயினும், அவர்கள் அதைத் தொட்டுப் பார்த்தே எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளலாம் என்று நினைத்தார்கள்.

முதலில் அவர்களில் ஒருவன் யானையின் அருகில் சென்று அதன்மீது தலையை மோதிக்கொண்டான். அதனால், அவன் "யானை சுவர்போல் இருக்கிறது" என்றான்.

இரண்டாவது குருடன், அதன் தந்தத்தைத் தொட்டுப் பார்த்து, அது கூர்மையாய் இருப்

பதை அறிந்தான். ஆதலால், "யானை ஈட்டியைப்போல் இருக்கிறது" என்றான்.

மூன்றாம் குருடன், யானையின் துதிக்கையைப் பிடித்துக்கொண்டு, "என்ன ஆச்சரியம்! இந்த மிருகம் பெரிய தூண்போல் அல்லவோ இருக்கிறது!" என்று சொன்னான்.

நாலாவது குருடன், யானையின் காலைத் தடவிப் பார்த்து, "உங்களுக்கு என்ன தெரியும்? இந்த யானை உரலைப்போல் இருக்கிறது" என்று உரத்துக் கூவினான்.

ஐந்தாவது குருடன், கையை நீட்டி அதன் காதைத் தொட்டான். "என்ன மூடர்கள்! உங்களுக்கு ஒன்றும் தெரியாது. இந்த யானை முறத்தைப்போல் அல்லவா இருக்கிறது?" என்று உறுதியாகச் சொன்னான்.

அப்போது, ஆறாவது குருடன், மெள்ள மெள்ள யானையினருகில் சென்று அதன் வாலைப் பிடித்துக்கொண்டான். உடனே, அவன், "நீங்கள் சொன்னது ஒன்றாவது சரியல்ல. இந்த யானை உலக்கையைப்போல் இருக்கிறது" என்று கத்தினான்.

இந்த வேடிக்கையைப் பார்க்க அனேகர் கூடிவிட்டனர். அவர்கள் இவர்களுடைய மூடத்தனத்தைக் கண்டு நகைத்தார்கள். அந்த ஆறு குருடர்களும் இதைக் கவனியாமல் ஒருவரோடு ஒருவர் சண்டையிட ஆரம்பித்தார்கள். ஒவ்வொருவனும் தான் சொன்னதுதான் சரியென்றான்.

சண்டை வளரும்போல் இருந்தது. அப்போது, கூட்டத்தில் இருந்த ஒருவன், அவர்களைத்

தடுத்து, "நேசர்களே! உங்களுக்குத்தான் கண் தெரியாதே. யானை இப்படியிருக்கும் என்பதை எப்படி நீங்கள் தெரிந்துகொள்ள முடியும்? நீங்கள் ஒவ்வொருவரும் யானையின் ஒவ்வொரு பாகத்தைமட்டும் பார்த்திருக்கிறீர்கள். உங்களில் ஒருவராவது யானையை முழுதும் பார்க்கவில்லை" என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

எதையும் முழுமையும் தெரிந்துகொள்ளாமல் சொல்வது தவருகும்.

| | | |
|---|---|---|
| உறுதி | சினேகிதன் | நேசன் |
| தவறு | வேடிக்கை | மூடத்தனம் |

பயிற்சி:—குருடர்கள் யானை எப்படி இருக்கும் என்று சொன்ஞர்கள்? யார் சொன்னது சரி?

## 27. அவரைக் கொடியின் வரலாறு

(ஒரு பையன் கூறுவது)

ஒருநாள் உபாத்தியாயர் எங்களைப் பள்ளிக்கூடத் தோட்டத்துக்கு அழைத்துக்கொண்டு போனுர். நாங்கள் அங்கே மண்ணைக் கொத்திப் பாத்தி கட்டினேம். அதில் சில அவரை விதைகளை நட்டுத் தண்ணீர் ஊற்றி வைத்தோம்.

மறுநாள் வந்து பார்த்தபோது உபாத்தியாயர் மண்ணிலிருந்த ஒரு விதையை எடுத்தார். விதையைக் கையினல் தொட்டோம். அது ஈரமாயிருந்தது; கொஞ்சம் பருத்தும் இருந்தது. விதையிலிருந்து ஒரு சிறு முளை கிளம்புவதுபோல் இருந்தது.



திரும்பவும், அடுத்த நாள் வந்தோம். வேரொன்றைப் பிடுங்கிப் பார்த்தோம். அதில் வேர் மண்ணுக்குள் சென்றிருந்தது. இரண்டு நாள் சென்றதும் மிகுந்த விதைகள் சிறு முளை களாக வெளியில் தெரிந்தன. பிறகு, இரண்டு இலைகள் தோன்றின. நாங்கள் தினந்தோறும் கொஞ்சம் தண்ணீர் மாத்திரம் ஊற்றிக்கொண்டே வந்தோம். செடிகள் நாளுக்கு நாள் கொஞ்சம் கொஞ்சமாய் வளர்ந்துகொண்டே வந்தன.

"குழந்தைகளுக்குத் தினந்தோறும் ஆகாரம் கொடுத்துக்கொண்டே வருகிறார்கள். அதனால் அவை வளர்கின்றன. செடிகள் நாளுக்குநாள் வளர்வதற்கு உணவு எது?" என்று எங்களுக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. இதைப்பற்றி நாங் கள் உபாத்தியாயரைக் கேட்டோம்.

உபாத்தியாயர்:—பிள்ளைகளே! குழந்தைக்குத் தாயார் பால் ஊட்டுகிறாள். செடிகளுக்குப் பூமி உணவு அளிக்கிறது. ஆகையால், அவைகளுக் குப் பூமியே தாய். பூமியில் செடிக்கு வேண்டிய

உணவுகள் இருக்கின்றன. சிறு செடிகளானபடி யால் அதிலுள்ள உணவை எடுத்துக்கொள்ளும் சக்தி அவைகளுக்கு மிகக் குறைவு. நீங்கள் ஊற்றின தண்ணீர் மண்ணிலுள்ள ஆகாரத்தைக் கரையச் செய்கிறது. குழந்தைச் செடிகள் சுலப மாய் அங்கிருந்த ஆகாரத்தை எடுத்துக் கொள்ளு கின்றன.

பிள்ளைகள் :—அவை எப்படி எடுத்துக்கொள் ளும்? சாப்பிடுவதற்கு அவைகளுக்கு வாய் இல் லையே?

உபாத்தியாயர் :—ஆம். வாய் என்பது இல்லை. ஆனால், மண்ணுக்குள் செல்லும் வேர் பல பக் கங்களிலும் மெல்லிய வேர்களாகப் பிரிகின்றது. அவை ஈரமான மண்ணிலிருக்கும் உணவுச் சத்தை உறிஞ்சுகின்றன. இந்தச் சத்துத்தான் செடிகளுக்கு ஆகாரம்.

உபாத்தியாயர் சொன்னதைக் கேட்டவுடன், அவையும் உயிருள்ளன என்று தெரிந்ததனால், எங்களுக்குச் செடியின் வளர்ச்சியை அறிவதில் அதிக ஊக்கம் உண்டாயிற்று. தினந்தோறும் நாங்கள் தோட்டத்துக்குப் போய்ப் பார்த்துக் கொண்டே இருந்தோம். செடிகள் அதிக உயர மாக வளர்ந்தவுடன் அவைகளால் நேராக நிற்க முடியவில்லை. அவைகளுக்குப் பக்கத்தில் கொம் புகளை நட்டோம். செடிகளும் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு கொடிகளாய் மேலே ஏறி வளர்ந்தன.

கொடிகளில் இலைகள் அதிகமாயின. இலை கள் மும்மூன்று சேர்ந்து இருந்தன. கிளைகளும் உண்டாயின. சில நாளானதும் கொடிகள் அதிக

மாகப் படரவேண்டியிருந்தபடியால் சின்னஞ்சிறு பந்தல் அமைத்தோம். பந்தல்மேலேயும் கொடிகள் படர்ந்தன.

பிறகு, நாங்கள் தினம் கொடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக்கொண்டே வந்தோம். கொஞ்ச நாளில் கொடிகள் பூப்பூத்துப் பிஞ்சு விட்டன. புஷ்பங்கள் வெண்மை ஊதா இந்நிறங்கள் உள்ளவை. பிஞ்சுகள் முற்றிக் காய்களாயின. காய்கள் கொத்துக்கொத்தாய் இருந்தன. ஒவ்வொரு காயிலும் பல விதைகள் இருந்தன. காய்களைப் பறித்து எல்லாரும் பங்கிட்டுக்கொண்டோம்; வீட்டிற்குக் கொண்டுபோய்ச் சமைத்துச் சாப்பிட்டோம்.

| | | |
|---|---|---|
| பந்தல் | உறிஞ்சு | சத்து |
| ஈரம் | பூப்பூத்தது | முளை |

பயிற்சி:— செடிகளுக்கு ஏன் தண்ணீர் ஊற்றவேண்டும்? ஏன் அவரைக் கொடிக்குப் பந்தல் அவசியம்?

## 28. சுகாதாரம்

நோயில்லாமல் சுகமாய் வாழ நாம் சில முறைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். முதலில் வீட்டைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளும் விதத்தைத் தெரிந்துகொள்ளுவோம்.

நாம் மேடான இடத்தில் கட்டியுள்ள வீடுகளில் வசிக்கவேண்டும். வீட்டைச் சுற்றிலும் ஈரம் காக்காதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். வீட்டின் தரை ஈரமில்லாமல் உலர்ந்திருக்கவேண்டும். வீட்டின் தரையையும் சுவர்களையும் நன்றாக மெழுகி வைத்துக்கொள்ளவேண்டும். சுவர்களுக்கு வெள்ளை அடிப்பது நல்லது.

வீட்டிலுள்ள பொருள்களை ஒழுங்காக அவை அவை இருக்கவேண்டிய இடங்களில் வைக்க வேண்டும். எல்லாவற்றையும் வரிசைப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

சாக்கடையை அடிக்கடி கழுவி அசுத்த ஜலம் தேங்காதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். சாக்கடை முதலிய அசுத்த இடங்களில் ஈ, கொசு முதலியன உண்டாகும். இவை நோயை வளர்க்கும்.

மாட்டுக்கொட்டிலில் சாணம் மூத்திரம் முதலியவை சேரவொட்டாமல் உடனுடன் சுத்தி செய்யவேண்டும். மாட்டின் சாணத்தை வீட்டிற்கு அருகில் போடாமல் கொல்லைப்புறத்தில் தூரத்தில் குழியில் போடவேண்டும்.

கிணற்றங்கரையைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும். கிணற்றைச் சுற்றிலும் மேடை கட்டவேண்டும். சாக்கடை நீரைக் கிணற்றினருகில் தங்கவிடக்கூடாது. கிணற்றுக்குப் பக்கத்தில் மரங்களை வளரவிடக்கூடாது. அவற்றின் இலை கிணற்றில் உதிர்தலால் தண்ணீர் கெடும்.

இவ்விஷயங்களை நன்றாகக் கவனித்து வந்தால் வீடு சுத்தமாக இருக்கும். நாமும் சுகமாக வாழலாம். இந்த மாதிரி ஓர் ஊரில் எல்லா வீடுகளும் இருக்குமானால் அந்த ஊரில் நோய் பரவாது.

பயிற்சி:—ஒரு கிணற்றின் படம் எழுது.

சுத்தமான <u>தண்ணீர்</u> சுகத்தைத் தரும். (கோடிட்ட சொல் இருக்கும் இடத்தில் 'காற்று, உணவு, உடை, வீடு' இவற்றை ஒவ்வொன்றாய் வைத்துப்படி.)

# 29. உண்மை

உள்ளதை உள்ளபடியே சொல்வதற்கு உண்மை என்று பெயர். அப்படி இல்லாமல் மாற்றிச் சொல்வது பொய்யாகும். உண்மையை உரைப்பவர் உயர்ந்தவர் ஆவர். பொய் பேசுபவர் தாழ்ந்தவர் ஆவர். உண்மை பேசியதால் நன்மை அடைந்த ஒருவன் கதையைக் கேளுங்கள்.

ஓர் ஊரில் ஏழையொருவன் இருந்தான். அவனால் வேண்டிய அளவு பணம் சம்பாதிக்க முடியவில்லை. ஆதலால், அவன் திருட ஆரம்பித்தான். ஆனால், அவனிடம் ஒரு நல்ல குணம் மட்டும் இருந்தது. அவன் எப்பொழுதும் உண்மையையே பேசிவந்தான்.

ஒருநாள் நடு நிசியில் அவன் அவ்வூர் அரண்மனையில் திருடப் போனான். அப்பொழுது அங்கே அரசன் மாறுவேடத்துடன் வெளியில் நின்றுகொண்டிருந்தான். திருடனை அரசன் சந்தித்தான். அவன் அரசன் என்று திருடனுக்குத் தெரியாது. அரசன் அவனை யாரென்று விசாரித்தான். திருடன், தான் திருடவந்ததைச் சொன்னான். அரசன் அதைக் கேட்டுத் தானும் கூட வருவதாகச் சொன்னான். கிடைப்பதில் ஆளுக்குப் பாதி என்று இருவரும் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

அரசன் அரண்மனை வாயிலில் காவலாக நின்றுகொண்டிருந்தான். திருடன் உள்ளே சென்றான்; பொக்கசத்தைத் திறந்தான். அதில் மூன்று இரத்தினங்கள் இருந்தன. அவன் அவற்றுள் இரண்டைமட்டும் எடுத்து வந்தான்; அரச

னிடம் ஓர் இரத்தினத்தைக் கொடுத்தான். அரசன் திருடனுடைய பெயர், இருக்குமிடம் முதலியவற்றைக் கேட்டுக்கொண்டான். பிறகு, இருவரும் பிரிந்து சென்றனர்.

அரசன் அரண்மனைக்குப்போய்ப் பொக்கசத்தைத் திறந்து பார்த்தான். அதில் மூன்றாவது இரத்தினம் இருப்பதைக் கண்டான். திருடனுடைய உண்மைக் குணத்திற்கு மெச்சினான்.

மறுநாட் காலையில், அரண்மனையில் களவு போன சங்கதி எல்லாருக்கும் தெரிந்தது. அரசன் உத்தரவுப்படி, மந்திரி பொக்கச அறைக்குப் போனான். பொக்கசத்தில் இரத்தினம் ஒன்று இருப்பதைக் கண்டான்; அதைத் தான் எடுத்து வைத்துக்கொண்டான். பிறகு, அரசனிடம் வந்து, "மூன்று இரத்தினங்களுமே களவு போயின" என்று கூறினான்.

அரசன் திருடனை வருவித்தான்; தன்னுடைய மற்ற மந்திரிகளையும் சபைக்கு வரவழைத்தான். அரசன் கட்டளைப்படி, முதல்நாள் இரவு நடந்ததைத் திருடன் கூறினான். அப்பால், அரசன் பின்பு நடந்தவைகளையும் எடுத்துச் சொன்னான். மூன்றாவது இரத்தினத்தைத் திருடின மந்திரி அவமானம் அடைந்தான்; தன்னை மன்னிக்கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

அரசன் மந்திரிக்குத் தண்டனை விதித்தான். திருடனுக்கு அரண்மனையில் ஓர் உத்தியோகம் கொடுத்தான். திருடன் திருட்டுத் தொழிலைவிட்டு உண்மையாய் வேலைசெய்து உயர்ந்த பதவியை அடைந்தான்.

"உண்மை உயர்வைத் தரும்"

| | | |
|---|---|---|
| பொக்கசம் | உயர்ந்தவர் | ஒப்பந்தம் |
| நிசி | தாழ்ந்தவர் | உத்தியோகம் |

பயிற்சி:—ஏழை ஏன் திருட ஆரம்பித்தான்? ஏழைத் திருடன் ஏன் இரண்டு இரத்தினங்களை எடுத்து வந்தான்? மந்திரியின் திருட்டுத்தனம் எப்படி வெளியாயிற்று?

## 30. ஜார்ஜ் வாஷிங்டன்

(சிந்து)

(நந்தன் சரித்திரத்திலுள்ள 'பழன மருங்கணையும்' என்ற மெட்டு.)

1. சின்னஞ் சிறுபையன் நன்றாய்த்
   தீட்டிய கத்தி ஒன்றை யெடுத்துச்
   சென்றான்; விளையாடத் தங்கள்
   சிங்காரத் தோட்டத்தி லுள்புகுந்தான்.

2. அங்கே பதியன் வைத்தே மிக
   ஆசை யுடனே வளர்த்திடுமோர்
   மங்காத ரோஜாச் செடி நின்று
   மகிழும்படி செய்ய வந்த பையன்

3. என் கையி லிருக்கின்ற கத்திக்
   கிந்தச் செடியை இரண்டாக்கும்
   வன்மை உளதாமோ என்று
   மனத்தி லெண்ணி மதியாமல்

4. நறுக்கித் துணித்திரண் டாக்கிப்பின்
   நல்லது நல்லதென் கத்தியென்றே
   குறுக்கா கியபாதை வழியாக்
   குதித்துப் போயினன் வீட்டுக்குள்ளே.

5. அப்பால் சிலநேரம் செல்ல
அவ்விடம் வந்தஅப் பையன் தந்தை
இப்பாதகம் செய்தவர் யாவரென்
றேக்கமும் கோபமும் கொண்டிரைந்
தார்.

6. கேட்டான் சிறு பையன் அதைக்
கெட்ட சமயம் என உணர்ந்தும்
வாட்டமுடைய மனத் துடன்
வந்து தந்தையி னடிப ணிந்தே

7. முன்பினறியாதவனுக இம்
மூடச் செயலினைச் செய்தவன் யான்
என் பாபப்பிழை பொறுத்துக்கொண்டு
என்னை மன்னித்தருள் செய்திடுவீர்

8. என்று னுடன்மகிழ்ந்தே தந்தை
எந்நாளு மிப்படி உண்மை சொன்னல்
நன்ருகு மெனவுரைத்தார் அந்த
நற்குணனே ஜார்ஜ் வாஷிங்டன்.

## 31. நாணயங்கள்

(சம்பாஷணை)

உபாத்தியாயர்:—சிறுவர்களே! அடுத்த படத்தைப் பாருங்கள். இதில் பை, காலணு, அரையணு, அணு, இரண்டணு, நாலணு, எட்டணு, ரூபாய் இவைகள் இருக்கின்றன. இவைகளுக்கு நாணயங்கள் என்று பெயர். நாணயங்களின் ஒரு புறத்தில் நமது சக்கரவர்த்தி தலையின் உருவம் இருக்கிறது. மற்ருெரு புறத்தில் இந்த நாணயங்களின் பெயர் முதலியன எழுதியிருக்கின்றன.

இவைகளில் சில சிவப்பாய் இருக்கும். இவை செம்பினால் செய்யப்பட்டவை. செம்பினால் செய்யப்பட்ட நாணயங்களின் பெயரைச் சொல்.




























மாணாக்கன் :—பை, காலணா, அரையணா.

உபாத்தியாயர் :— அவை என்ன வடிவமானவை?

மாணுக்கன் :—அவை வட்ட வடிவம்.

உபாத்தியாயர் :—(நிக்கல் ஓரணுவைக் காட்டி) இந்த நாணயம் நிக்கல் என்னும் உலோகத்தால் செய்யப்பட்டது. இதன் விளிம்பு வளைந்து வளைந்து வட்டமாக இருக்கின்றது. இப்படி இதில் 12 வளைவுகள் உண்டு. இதன் பின்புறத்தில் 1 என்று போட்டிருப்பதைப் பார். அது ஓரணு என்பதைக் குறிக்கும்.

(நிக்கல் 2 அணுவைக் காட்டி) இதுவும் நிக்கல் நாணயம். இதில் என்ன போட்டிருக்கிறது? இது என்ன வடிவமாய் இருக்கிறது?

மாணுக்கன் :—இதன் பின்புறத்தில் 2 என்று போட்டிருக்கிறது. இது இரண்டணு. இது சதுரமாய் இருக்கிறது.

உபாத்தியாயர் :—(நிக்கல் 4 அணுவைக் காட்டி) இந்த நாணயத்தைப் பார். இது என்ன நாணயம்? இதன் வடிவம் என்ன? இது என்ன உலோகம்?

மாணுக்கன் :—இதன் பின்புறத்தில் 4 என்று போட்டிருக்கிறது. இது நாலணு. இதற்கு எட்டு வளைவுகள் இருக்கின்றன. இதுவும் நிக்கல் உலோகமே.

உபாத்தியாயர் :—சரி, இப்பொழுது நிக்கல் நாணயங்களின் பெயர்களைச் சொல்.

மாணுக்கன் :—அணு, இரண்டணு, நாலணு.

உபாத்தியாயர்:—(வெள்ளியினால் செய்த நாணயங்களைக் காட்டி) சரி, இவை எவற்றால் செய்தவை?

மாணுக்கன் :—வெள்ளியினால் செய்தவை.

உபாத்தியாயர்:—வெள்ளி நாணயங்கள் எவை?

மாணுக்கன்:—இரண்டணு, நாலணு, எட்டணு, ஒரு ரூபாய்.

உபாத்தியாயர்:—அவைகளின் வடிவம் என்ன?

மாணுக்கன் :—அவை எல்லாம் வட்ட வடிவமானவை.

உபாத்தியாயர் :—சரி, நான் சொல்வதைக் கவனி.

காலணுவுக்கு 3 பை

அரையணுவுக்கு 6 பை; 2 காலணு.

அணுவுக்கு 12 பை; 4 காலணு; 2 அரையணு.

இரண்டணுவுக்கு அரைக்கால் ரூபாய் என்றும் பெயர். இரண்டணுவுக்கு 24 பை; 8 காலணு; 4 அரையணு; 2 ஓரணு.

நாலணுவுக்குக் கால் ரூபாய் என்றும் பெயர். நாலணுவுக்கு 48 பை; 16 காலணு; 8 அரையணு; 4 ஓரணு; 2 அரைக்கால் ரூபாய்.

எட்டணுவுக்கு அரை ரூபாய் என்றும் பெயர். அதற்கு 96 பை; 32 காலணு; 16 அரையணு; 8 ஓரணு; 4 அரைக்கால் ரூபாய்; 2 கால் ரூபாய்.

ரூபாய்க்கு 192 பை; 64 காலணு; 32 அரையணு; 16 ஓரணு; 8 அரைக்கால் ரூபாய்; 4 கால் ரூபாய்; 2 அரை ரூபாய்.

இவைகளை நன்றாகத் தெரிந்துகொண்டால் தான் சாமான் முதலியவை வாங்கவும் விற்கவும் சௌகரியமாயிருக்கும்.

| | | |
|---|---|---|
| நாணயம் | நிக்கல் | உலோகம் |
| வெள்ளி | சௌகரியம் | விளிம்பு |

பயிற்சி:—வெள்ளி நாணயங்களில் இரண்டின் பெயரைச் சொல்.

## 32. தெனாலிராமன் கதை

முன்னொரு காலத்தில், கிருஷ்ண தேவராயர் என்று ஓர் அரசர் இருந்தார். அவரிடம் தெனாலி ராமன் என்று ஒரு விகடகவி இருந்தான். அவனுடைய வேலை ஏதாவது விகடம் செய்து அரசரைச் சந்தோஷிக்கச்செய்வது. ஒருநாள் தெனாலி ராமனிடத்தில் அரசருக்குச் சற்றுக் கோபம் உண்டாயிற்று. அதனால், அரசர், 'அவனை அரண்மனைக்குள் விடவேண்டாம்' என்று காவற்காரர்களுக்கு உத்தரவிட்டார்.

இப்படியிருக்க, மறுதினம் அரச சபையில் ஒரு பாகவதர் கதை செய்ய வந்திருந்தார். தெனாலிராமன் அரண்மனைக்குள் போக விரும்பினான். முதலில் இருந்த காவற்காரன் அவனை, "உள்ளே போகக்கூடாது" என்றான். தெனாலி ராமன், அவனைப் பார்த்து, "எனக்குக் கிடைப்பதில் பாதி தருவேன். தயவு செய்து உள்ளே போக வழிவிடு" என்றான். இலாபத்திற்கு ஆசைப்பட்டு அவன் உடனே வழிவிட்டான்.



இரண்டாம் காவற்காரனிடமும் அப்படியே சொல்லிவிட்டுத் தெனாலிராமன் அரசசபைக்குள் போனான்.

அவன், அங்கே கதை செய்யும் பாகவதரைப் பார்த்துப் பரிகாசம் செய்தான். உடனே, அரசருக்குக் கோபம் வந்தது; "இவனுக்கு இருபத்துநான்கு சவுக்கடி கொடு" என்றார். அதைக் கேட்டு, தெனாலிராமன், "மஹாராஜாவே! இந்த இலாபத்தை அடையவேண்டியவர்கள் வேறு இருக்கிறார்கள். எனக்குக் கிடைப்பதில் ஒரு பாதியை முதற் காவற்காரனுக்குக் கொடுக்க வேண்டும்; மற்றொரு பாதியை இரண்டாம் காவற்காரனுக்குக் கொடுக்கவேண்டும்" என்றான். அரசர் உண்மையை விசாரித்துத் தம் காவற்காரர் ஒவ்வொருவரையும் பன்னிரண்டு சவுக்கடி அடிக்கச் செய்தார்.

இந்த மாதிரி, தெனாலிராமன் தான் ஓர் அடியும் படாமல் தப்பித்துக்கொண்டான்.

| | | |
|---|---|---|
| விகடகவி | காவற்காரர் | சவுக்கடி |
| தெனாலிராமன் | மஹாராஜா | பாகவதர் |

பயிற்சி:—சரியான பதத்தைச் சேர்:—

தெனாலிராமன்———தப்பித்துக்கொண்டான் (புத்தியில்லாமல், உபாயத்தால்).

காவற்காரர்கள் அவனை——— ———உள்ளே விட்டார்கள். (இலாபத்திற்கு ஆசைப்பட்டு, வேடிக்கை பார்க்க, தெரியாமல்).

# 33. பழமொழிகள்

அடக்கம் ஆயிரம் பொன் தரும்.

ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி.

இல்லாதவன் பொல்லாதவன்.

ஈயார் இருந்து என்ன இறந்து என்ன ?

உண்ட வீட்டிற்கு இரண்டு செய்யலாமா ?

ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு எளிது.

எய்தவன் இருக்க அம்பை நோவதேன்?

ஏழை பேச்சு அம்பலம் ஏருது.

ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது.

ஒன்றானாலும் நன்றாய்ச்செய்.

காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்.

கெடுவான் கேடு நினைப்பான்.

துள்ளுகிறமாடு பொதி சுமக்கும்.

துஷ்டனைக்கண்டால் தூரவிலகு.

தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டில்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

பதறாத காரியம் சிதறாது முடியும்.

புலி பசித்தால் புல்லைத் தின்னுமா ?

போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து.

விளையும்பயிர் முளையிலே தெரியும்.

## 34. ஆத்திசூடி

(ஔவையார்)

சக்கர நெறிநில்.

சான்றோர் இனத்திரு.

சேரிடம் அறிந்துசேர்.

தக்கோன் எனத்திரி.

தீவினை அகற்று.

தூக்கி வினைசெய்.

தேசத்தோடு ஒத்துவாழ்.

தொன்மை மறவேல்.

நீர்விளை யாடேல்.

நூற்பல கல்.

பழிப்பன பகரேல்.

பூமி திருத்தியுண்.

மாற்றானுக்கு இடங்கொடேல்.

மூர்க்கரோடு இணங்கேல்.

மேன்மக்கள் சொற்கேள்.

வல்லமை பேசேல்.

வாதுமுற் கூறேல்.

வித்தை விரும்பு.

வீடுபெற நில்.

வைகறைத் துயிலெழு.

# 35. கொன்றைவேந்தன்

(ஔவையார்)

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
ஆலயந் தொழுவது சாலவும் நன்று.
இல்லற மல்லது நல்லற மன்று.
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
ஏவா மக்கள் மூவா மருந்து.
ஐயம் புகினும் செய்வன செய்.
ஓதலின் நன்றே வேதியர்க்கு ஒழுக்கம்.
ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.
அஃகமும் காசும் சிக்கெனத் தேடு.
கிட்டாதாயின் வெட்டென மற.
கீழோ ராயினும் தாழ உரை.
குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.
கூரம் பாயினும் வீரியம் பேசேல்.
கேட்டில் உறுதி கூட்டும் உடைமை.
கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி.
சான்றோர் என்கை ஈன்றோர்க் கழகு.
சீரைத் தேடின் ஏரைத் தேடு.
சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்.
சூதும் வாதும் வேதனை செய்யும்.
சேமம் புகினும் யாமத் துறங்கு.
சோம்ப ரென்பவர் தேம்பித்திரிவர்.
தந்தைசொல் மிக்க மந்திர மில்லை.

தாய்சொல் துறந்தால் வாசகம் இல்லை.
திரைகட லோடியும் திரவியம் தேடு.
தீராக் கோபம் போராய் முடியும்.
தேடா தழிக்கின் பாடாய் முடியும்.
தையும் மாசியும் வையகத் துறங்கு.
தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
தோழ னோடும் ஏழைமை பேசேல்.
நல்லிணக்கம் அல்லது அல்லற் படுத்தும்.
நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை.
நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு.
நெஞ்சை ஒளித்தொரு வஞ்சக மில்லை.
பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.
பாலோ டாயினும் காலம் அறிந்துண்.
புலையும் கொலையும் களவும் தவிர்.
பொல்லாங் கென்பவை எல்லாம் தவிர்.
போனகம் என்பது தான் உழந் துண்டல்.
மருந்தே ஆயினும் விருந்தோ டுண்.
மாரி அல்லது காரியம் இல்லை.
மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை.
மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
மேழிச் செல்வம் கோழை படாது.
வளவ னாயினும் அளவறிந் தழித்துண்.

